

கருப்பு வெள்ளை
வெறும் நிறங்களல்ல
வாழ்க்கையின் நிஜங்களே!



சந்தமாமா விஜயா
கம்பைன்ஸ்

# கருப்பு வெள்ளை

வண்ணத்தில்

மனோபாலா தேவா
B.வெங்கட்ராமரெட்டி

உருவாக்குங்கள் புதுமுகங்களை "எக்கோ" வினால்!



"எக்கோ" ஸ்கெட்ச் பேனாக்களால் முகமூடிகளை உருவாக்குவது எளிதானது மட்டுமல்ல, அது மிகவும் மகிழ்ச்சி அளிக்கக் கூடியது!

"எக்கோ" பளிச்சிடும் பல வண்ணங்களில் 12, 24 மற்றும் 30 பேனாக்கள் கொண்ட பேக்குகளில் கிடைக்கின்றது.

அனைத்திற்கும் மேலான சிறப்பு, "எக்கோ" நீர் அடிப்படை யிலானது, நச்சுத் தன்மையற்றது...

ஆகவே, நீங்கள் உபயோகிக்க முற்றிலும் பாதுகாப்பானது.

சற்று நினைத்துப் பாருங்கள், எவ்வளவு தாய்மார்கள் அதை விரும்புகிறார்கள்!

ஆயிரக்கணக்கான பரிசுகளை வென்றிடுவீர்!



"எக்கோ" என்றாலே எல்லையற்ற களிப்பு!

Ekco®

உங்கள் நுண்கலை உணர்வுகளின் மென்மையான வெளிப்பாடு.



Karishma/SW/6/2016 TM C

# விட்டுக் கொடுக்காமல்
# ஒட்டிக் கொள்ளும்
# அற்புதமான பசை வெமிக்கால்

பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டும் பொம்மை வீடு கட்டிடுவீர். ஃபர்னிச்சர்கள் போட்டிடுவீர். கைக்கடக்கமாய் மெத்தெனப் பஞ்சடைத்த மிருக பொம்மைகள், பயமுறுத்தும் முகமூடிகள், மரப் பாச்சிகள்.... மரம், காகிதம், கார்டுபோர்டு, துணிகள் இவற்றின் துணையுடனே...

உங்கள் கற்பனையே வேடிக்கைக்கு எல்லை! உங்கள் ஒய்வு வேளையை உல்லாசமாய்க் கழித்திடச் சிறந்த வழி.

**VAMICOL®**

ஆர்ட் அண்டு கிராஃப்ட் அட்ஹெஸிவ்



வேம் ஆர்கானிக்
கெமிக்கல்ஸ் லிமிடெட்
ஸ்கைலைன் ஹௌஸ், 85, நேரு பிளேஸ், புது தில்லி-110 019.




React/198/92 Tam

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி





## மத ஒற்றுமை

அமெரிக்காவின் சிக்காகோ நகரில் நூறு ஆண்டுகளுக்கு முன் உலக அனைத்து மத மாநாடு கூடியது. 1893 செப்டம்பர் 11ந் தேதி நிகழ்ந்த வரலாற்றுப் புகழ் நிகழ்ச்சியை இன்றும் நாம் நினைவுகொண்டு பெருமிதப் படுகிறோம். ஏனெனில் இந்த உலக மாநாட்டில் தான் சுவாமி விவேகானந்தர் கலந்து கொண்டு வேதங்களின் உலக மதத்தை வலியுறுத்திச், சிறப்புரை ஆற்றினார். இது இந்து மதம் பற்றியது அல்ல. உலகமதம் என்ற அடிப்படையிலாம்.

அந்த மாநாட்டில் தம்மைக் கடைசியில் பேச அழைக்குமாறு விவேகானந்தர் வேண்டினார். மாநாட்டின் தலைவர் ஜே. எச். பரோஸ் அதனை ஏற்கவே, முடிவில் சுவாமி பேசும்போது அங்கு குழுமிய ஏழாயிரம் பிரதிநிதிகளும் எழுந்து நின்று அவரது சொற்பொழிவைப் பாராட்டி இரண்டு நிமிட நேரம் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

சுவாமியின் கம்பீரத் தோற்றமும் அணிந்திருந்த நீண்ட வெள்ளை அங்கியும், மஞ்சள் நிறத் தலைப் பாகையும், நல்ல நிறமும் யாவரையும் பெரிதும் கவர்ந்தன. சுவாமி பிற மதங்களைக் குறை கூறாததோடு எல்லா மதங்களும் கடவுளை அடையும் பாதைகள் எனக் கூறியது எல்லோரையும் மெய்சிலிர்க்க வைத்தது. மத ஒற்றுமையையும், பிறமதங்களைச் சகித்துக் கொள்ள வேண்டும் எனவும் அவர் வலியுறுத்தியதை வரவேற்றனர்.

நாம் விவேகானந்தரின் இந்த அறிவுரைகளை ஏற்று செயல் படுகிறோமா? சுவாமி மதஒற்றுமை வேண்டும் எனச் சொன்னதைக் கிளிப்பிள்ளைபோல்க் கூறி வருகிறோமே அல்லாது அதன்படி நடக்கவில்லையே, இந்த நூறாவது ஆண்டு விழாவைக் கொண்டாடிய பிறகாவது அவரது அறிவுரைப்படி நடந்து காட்டுவோமாக.


மதிமுகம்: 93 அக்டோபர் 1993 புன்னகை: 4

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00






# வச்ச குறி தப்பாது!

சுடுவதில் சூரப்புலிகளெல்லாம் வாருங்கள். இந்த பக்கத்தை வெட்டி எடுத்து சுவரில் ஒட்டுங்கள். கீழே காணப்படும் துப்பாக்கிகளில் எதையாவது எடுத்து குறி தவறாது சுடுங்கள். வச்ச குறி தப்பக்கூடாது. இந்தப் புலி தோற்கக்கூடாது.

20 புள்ளிகள். வெற்றி மகுடத்தில் இன்னுமோர் இறகு

10 புள்ளிகள் கழிக்கவும். சிக்கலில் மாட்டிக்கொண்டீர்கள்.

80 புள்ளிகள்

40 புள்ளிகள்

10 புள்ளிகள்

10 புள்ளிகள் கழிக்கவும்.




பரபரப்பான ஃபன் ஷூட்டர் துப்பாக்கிகளைப் பற்றி அறிந்து கொள்ள சுய விலாசமிட்ட கவர் இணைத்து எழுதுங்கள். ப்ளோ ப்ளாஸ்ட் லிமிடெட் (டாய்ஸ் டிவிஷன்) லியோ ஹவுஸ், 88-ஸி, ஓல்ட் பிரபாதேவி ரோடு, பம்பாய்-400 025. இணைக்கப்படும் கவரில் உங்கள் பெயர், வயது,பள்ளி ஆகிய விபரங்களும் தனித்தாளில் வைக்கவேண்டும்.

விளையாட்டு விருப்பங்கள்

HTA.1269.94

## செய்திகளும் தகவல்களும்

# க்யூபா நிலவரம்

நாற்பது ஆண்டுகளுக்கு முன் க்யூபாவில் புரட்சி நடந்து ஆட்சி மாறிய போதி லும் அதன் பொருளாதார நிலை முன்னேறவில்லை. அதனால் இந்த ஆண்டைக் குதூகலமாக அந்த நாட்டவர் கொண்டாடவில்லை. நாற்பது ஆண்டுகளுக்கு முன் கம்யூனிசத் தலைவர் பீடல் காஸ்ட்ரோ தன் சகாக்களான புரட்சிக்கார இளைஞர் களைச் சேர்த்துக் கொண்டு சான்பிரான்சிஸ்கோவிலுள்ள ராணுவ நிலையத்தைத் தாக்கினார். கெஸ்ஸிரி பாடிஸ்டாவின் எதேச்சாதிகார ஆட்சியை ஒழிக்க முயன்ற அப்போராட்டத்தில் பல இளைஞர்கள் உயிர்நீத்தனர். காஸ்ட்ரோ பிடிபட்டுச் சிறையில் அடைக்கப் பட்டார்.



மூன்றாண்டுகளுக்குப்பின் அவரது மற்றொரு முயற்சி வீணாகியது. 1959ல் நடத்திய போராட்டத்தில் காஸ்ட்ரோ வெற்றி பெற்றார். பாடிஸ்டா நாட்டி லிருந்து தப்பி ஓடிவிட்டார். காஸ்ட் ரோ ஹவானாவில் கம்யூனிஸ்ட் அரசாங்கத்தை நிறுவினார். அதுவரை அமெரிக்கா க்யூபாவை ஆட்டிவைத்து வந்தது. க்யூபா அமெரிக்கத் தொடர்பை அறுத்துவிட்டது. 1960ல் பிரதமமந்திரி யான காஸ்ட்ரோ எவ்வித நஷ்டஈடும் கொடுக்காமல் தன் நாட்டிலிருந்த அமெரிக்க வியாபார நிறுவனங்களை எல்லாம் அரசுடமை ஆக்கிவிட்டார். இத னால் அமெரிக்கா ஆத்திரம் கொண்டு தன் தூதரகத்தை மூடி மறு ஆண்டு அதன் மீது படை எடுத்து தோற்றது.

அப்போது முதல் காஸ்ட்ரோ க்யூ பாவை முழுக்க முழுக்கக் கம்யுனிஸ்ட் நாடாக உருவாக்கலானார். க்யூபாவில் ஒரே ஒரு அரசியல் கட்சிதான் இயங்கி யது. அது க்யூபா கம்யுனிஸ்ட் கட்சி. 1976ல் காஸ்ட்ரோ க்யூபாவின் அதிப ரானார்.

கொலம்பஸ் 1492ல் அமெரிக்காவைக் கண்டு பிடித்தபோது க்யூபா விலும் அடி

எடுத்து வைத்தாராம். அன்றிலிருந்து அது ஸ்பெயின் நாட்டின் ஆதிக்கத்தில் இருந்து வந்தது. 1898ல் நடந்த ஸ்பெயின்-அமெரிக்கப்போரில் ஸ்பெயின் தோற்றது. க்யூபா அமெரிக்காவின் வசமாகியது. ஆனால் 1902ல் க்யூபா சுதந்திர நாடாகியது. அப்படியும் அமெரிக்கா தான் க்யூபாவின் அயல் நாட்டுக் கொள்கைகளை வகுத்து வந்தது.. 1933ல் பாடிஸ்டா அதிகாரத்தைக் கைப்பற்றினார். 1944லிருந்து 1952 வரையான காலம் நீங்கலாக 1959வரை பாடிஸ்டாவின் ஆட்சிதான் இருந்தது.

காஸ்ட்ரோ 1959ல் ஆட்சிக்கு வந்ததிலிருந்து க்யூபா சோவியத் ரஷ்யமண்டல நாடாகியது. ரஷ்யாவும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளும் அதற்கு உதவின. ஆனால் இப்போது அங்கெல்லாம் கம்யூனிஸ்ட் அரசுகள் இல்லாது போகவே க்யூபா பொருளாதார நெருக்கடிக்கு ஆளாகியுள்ளது. லாடின் அமெரீக்க நாடுகளும் க்யூபாவின் நேசநாடுகளான கொலம்பியா, அர்ஜண்டினாவும் க்யூபாவை அமெரிக்கவுடன் நல்லுறவு கொள்ளும்படி வற்புறுத்தி வருகின்றன. அப்போது அமெரிக்கா க்யூபா மீது விதித்த பொருளாதாரத் தடை நீங்கி நாடு முன்னேறும் என அவை கருதுகின்றன. அப்படி அமெரிக்க உதவி கிடைத்தாலும் தான் சோஷலிசக் கொள்கையை விடமுடியாது எனக் காஸ்ட்ரோ கூறுகிறார்.




1993ல் நடந்த பொதுத் தேர்தலில் காஸ்ட்ரோவின் கட்சி 93 சத இடங்களை தேசிய சபையில் கைப்பற்றியது. அப்போது 66 வயதான காஸ்ட்ரோ "ஐந்து ஆண்டுகளுக்குப் பின் மக்கள் மீண்டும் நான் தேர்தலில் போட்டியிடக் கோர மாட்டார்கள் என்றே நம்புகிறேன்" என்றார்.

கம்யூனிஸ்ட் நாடுகளான சீனாவும் வியட்நாமும் இப்போதும் க்யூபாவிற்கு உதவி வருகின்றன.




# நிலையானது எது?

**மா**ளவ தேச மன்னன் மரகத சேனன் திடீரென்று இறந்து விட்டான். அவனது தமையன் மாணிக்க சேனன் காட்டில் ஞானசேகரரின் ஆசிரமத்தில் துறவியாக வாழ்ந்து வந்தான். அவனுக்கு நாடாளும் ஆசையே இருக்கவில்லை. சிறு வயதிலேயே அவன் தன் பெற்றோர்களின் அனுமதி பெற்று ஆசிரமத்தில் சேர்ந்துவிட்டான்.

மரகதசேனனின் மந்திரிகளில் பெரியவரான சுபுத்தி ஞானசேகரரின் ஆசிரமத்திற்குச் சென்று மாணிக்கசேனனைக் கண்டு நிலைமையை எடுத்துக் கூறினார். அவர் "பிரபுவே! மரகதசேனரின் மகன் சிறு வயதினன். இப்போது பத்து வயதுதான் அவனுக்கு ஆகிறது. இன்னும் பத்து வருடங்கள் கழிந்த பிறகே அவனை சிம்மாசனத்தில் அமர்த்தலாம். தாங்கள் வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றால்தான் நாடு பிழைக்கும்" என்றான்.

மாணிக்கசேனன் தன் குருவைக் கண்டு சுபுத்தி சொன்னதை எல்லாம் அவரிடம் கூறினான். ஞானசேகரர் சற்று நேரம் யோசித்து "நீ இவ்வளவு காலம் ஒரு துறவி போல வாழ்ந்தாய். இந்த ஆசிரமத்தை நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும் என நான் எண்ணியிருக்கிறேன். அதற்கு இன்னும் சிறிது காலம் ஆகும். அதனால் நீ மாளவ நாட்டிற்குப் போய் நிலைமையைச் சரிப்படுத்து. அரச குமாரனுக்கும் சொல்ல வேண்டியதைச் சொல்லிக்கொடு. எது எப்படியானாலும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபின் அதனை நன்கு நிர்வகி" எனக் கூறினார்.

மாணிக்கசேனனும் அதற்கு சம்மதித்து ஞானசேகரரிடம் விடை

—பாபநாசம்சாமா—



யின் மனைவியான குணவதியிடமும் யோசனை கேட்டான். அவளும் "என் தந்தையிடம் நான் ஆட்சி முறை பற்றி நன்கு தெரிந்து கொண்டிருக்கிறேன். என் கணவர் என் யோசனைகளையோ அமைச்சர்களின் யோசனைகளையோ ஏற்றதும் இல்லை. தன் இஷ்டப்படி எல்லாம் செய்து கொண்டிருந்தார். அதனால் எல்லாம் சீர்குலைந்தது" எனக்கூறி தன் யோசனைகளையும் தெரிவித்தாள்.

குணவதியின் யோசனைகள் உண்மையிலேயே சிறந்தவை என மாணிக்கசேனன் கண்டான். அவன் எல்லோர் சொல்வதையும் கவனமாகக் கேட்டும் தானும் யோசித்தும் முடிவு எடுக்கலானான். அதன் பயனாக நாட்டில் பல நல்ல மாற்றங்கள் ஏற்பட்டன.

மாணிக்கசேனன் ஆட்சியில் கவனம் செலுத்தியதோடு இளவரசன் பலசேனனுக்கு உரிய முறையில் கல்வி புகட்டலானான். அவனும் எல்லாவற்றையும் விரைவில் கற்றுக் கொண்டான். அதுகண்டு மாணிக்கசேனன் மகிழ்ந்து ஒரு நாள் குணவதியிடம் "பலசேனன் தன் பதினைந்தாவது வயதிலேயே சிம்மாசனத்தில் அமரத் தகுதி பெற்றுவிட்டான். இனி நீயும் அவனுமாகச் சேர்ந்து ஆட்சி புரியலாம். நானும் ஆசிரமத்திற்குச் சென்றுவிடலாம்" என்றான்.

பெற்றுக் கொண்டு தலைநகருக்குச் சென்றான். அவன் ஞானசேகரர் கூறியபடி உடனேயே ஆட்சியில் கவனம் செலுத்தினான். அப்போது அவனுக்கு பொக்கிஷத்தில் பணம் இல்லை என்பது தெரிந்தது. பணம் தேவைப்படும் போது மக்கள் மீது வரிகளை உயர்த்தி பொக்கிஷத்தில் பணம் சேர்க்கிறார்கள் என்றும் அதிகாரிகள் கை நிறைய லஞ்சம் வாங்குகிறார்கள் என்பதும் அவனுக்குத் தெரிய வந்தது.

மாணிக்கசேனன் தன் தம்பியைப் போல அல்லாமல் மந்திரிகளைக் கூட்டி யோசனை கேட்டான். அதற்குப் பின் தன் தம்பி

அதைக்கேட்ட குணவதி திடுக்கிட்டு "ஊஹும். கூடாது. நீங்கள் என் மகனுக்கு இருபது வயதாகும் வரை இங்கிருந்து போகும் பேச்சே எடுக்கக் கூடாது. அவனுக்கு இருபது வயதானதும் அவனை சிம்மாசனத்தின் மீது அமர்த்துங்கள். அதுவரை நம் நாட்டை எதிரிகள் தாக்காமல் தடுப்பது உங்கள் பொறுப்பு. இதை நீங்கள் செய்யாதுபோனால் எல்லோரும் உங்களைத்தான் ஏசுவார்கள்" என்றாள்.

அவளது கண்களில் ததும்பிய கண்ணீரும் இளவரசனின் இளம் பிராயமும் மாணிக்கசேனனின் மனதைக் கரைத்துவிட்டது. எனவே அவன் குணவதி கூறியபடி மேலும் சில ஆண்டுகள் இருக்கச் சம்மதித்தான். மாணிக்கசேனனின் ஆட்சியில் அதிகாரிகளால் லஞ்சம் வாங்க முடியவில்லை. ஊழல் புரியும் அரசாங்க ஊழியர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டார்கள்.

ஒருநாள் ஞானசேகரர் மாளவ நாட்டின் தலைநகருக்கு வந்தார். அவர் மாணிக்கசேனனைக் கண்டு "எனக்கு வயதாகிவிட்டது. நீ ஆசிரமத்திற்கு வா. நான் உனக்குச் சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லிவிட்டு இமயமலைக்குப் போய் விடுகிறேன். நீயும் இங்கு வந்து இருபது ஆண்டுகள் இருந்துவிட்டாய். இப்போதே என்னுடன் கிளம்பு" என்றார்.



கடந்த நான்கைந்து ஆண்டுகளில் மாணிக்கசேனனின் மனதில் அரசபோகங்களை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை தலைதூக்கலாயிற்று. அதனால் அவன் ஞானசகரருக்கு நேரிடையாக எவ்வித பதிலும் கூறாமல் முதலில் அவரை குணவதியிடம் அழைத்துச் சென்றான்.

அவள் ஞானசேகரரின் கால்களில் விழுந்து வணங்கி "நீங்கள் மாணிக்கசேனரை நிரந்தரமாக இங்கேயே இருக்க அனுமதியுங்கள். அவர் ஆசிரமத்திற்குப் போக வேண்டாம்" என்றாள். அதற்குப் பின் மாணிக்கசேனன் அவையைக்



கூட்டி ஞானசேகரரின் விருப்பத்தைத் தெரிவித்தான். அது கேட்டு மந்திரிகளும், பிரபுக்களும் மற்ற பிரமுகர்களும் கண்கலங்கியவாறே ஞானசேகரரிடம் மாணிக்கசேனனை ஆசிரமத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டாம் என்று வேண்டினார்கள்.

ஞானசேகரர் மாணிக்கசேனனைத் தனியாக அழைத்து "நீ துறவியான போதிலும் மாயையில் சிக்கிக் கொண்டாய். நிலையற்ற இந்த போக வாழ்விற்காக நிலையான ஞானமார்க்கத்தைவிட்டு விட்டாய். நன்றாக யோசி. உனக்கு ஒரு மாதகால அவகாசம் அளிக்கிறேன். இதற்குள் நீ ஆசிரமத்திற்கு வருவதாக இருந்தால் வா" என்று கூறிப் போய் விட்டார்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் பொக்கிஷத்தில் பணம் திருடிய திருடன் ஒருவன் அகப்பட்டான். அவன் மந்திரி ஒருவனின் மகன் என்று விசாரணையில் தெரிந்தது. அந்த விசாரணையின்போது மேலும் சில விஷயங்கள் வெளியாகின.

அவனை விசாரித்த நீதிபதி அவனுக்கும் அந்த மந்திரிக்கும் மரண தண்டனை விதித்தார். ஏனெனில் அவன் பலமுறை திருடித் தன் தந்தையிடம் அவற்றைக் கொடுத்து வைத்திருந்தான். தீர்ப்பைக் கேட்ட மந்திரி நீதி மன்றத்தில் கோபமாக நீதிபதியைப் பார்த்து "நீதிபதியாக இருக்க உனக்கு ஏது தகுதி? முன்பு ஒவ்வொரு ஆண்டும் உனக்கு லட்சம் வராகன்கள் லஞ்சம் கொடுத்து தானே வந்தேன். புதிய மன்னர் வந்ததும் நீ நேர்மையானவன் என நடிக்கிறாயோ?" என்று கேட்டான்.

அதுகேட்டு நீதிபதி "நீ வாய்க்கு வந்தபடி உளறுகிறாய். உன் சொல்லுக்கு மதிப்பே இல்லை. ஆனாலும் நீ என் மீது குற்றம் சாட்டுவதால் உன்னை அரசரே விசாரிக்க வேண்டும் என உத்தரவிடுகிறேன்" எனக்கூறி அந்த வழக்கை

மாணிக்கசேனன் விசாரிப்பார் என்றார்.

மந்திரியோ பலமாக சிரித்து "மன்னர் என்னை எப்படி தண்டிக்க முடியும்? நான் பொக்கிஷத்துப் பணத்தைத் திருடுவதை அறிந்தும் அவர் என்னைப் பதவியில் இருக்கவிட்டு என் யோசனைகளைக் கேட்டுதானே நடக்கிறார். அவர் உதவி இராவிட்டால் என் மகன் பொக்கிஷம் வரை போயிருப்பானா? எங்கள் துரதிர்ஷ்டம் காரணமாக ஒரு நேர்மையான காவலாளி என் மகனைப் பிடித்துவிட்டான்" என்றான்.



இதைக் கேட்டு நீதி மன்றத்தில் இருந்தவர்கள் எல்லாம் கல்லாய்ச் சமைந்தனர். அப்போது மந்திரி "மன்னருக்கு ஏன் பணம் தேவைப் பட்டது என்று கேட்கிறீர்களா? இப்போது ஒரு ரகசியத்தைக் கூறுகிறேன். துறவி எனப்படும் மன்னருக்குக் காட்டில் ஒரு மனைவி இருக்கிறாள். அவளுக்கு ஒரு மகனும் இருக்கிறான். அந்த மகனை மன்னர் இந்நாட்டு மன்னனாக்கத் தீர்மானித்திருக்கிறார். இதற்காகப் படைத் தளபதிகளில் பலருக்குப் பணம் கொடுத்து அவர்களைத் தம் பக்கம் சேர்த்துக் கொண்டிருக்கிறார். திடீரெனக் கலகம் செய்து சிம்மாசனத்தைக் கைப்பற்றுவதே அவர் திட்டம். இந்தக் கலகத்தில் ராணி குணவதியும் இளவரசர் பலசேனரும் கொல்லப்பட்டு விடுவார்கள். இந்தத் திட்டத்தில் எனக்கும் பெரும்பங்கு உண்டு" என்றான்.

இந்தத் தகவல் மாளவ நாட்டையே ஒரு குலுக்கு குலுக்கி விட்டது. எல்லோரும் இதற்கெல்லாம் மாணிக்கசேனன் பதில் சொல்லியாக வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். ராணி குணவதியும் கூட மாணிக்கசேனனின் விளக்கத்தைக் கோரினாள். தனக்கு எதுவுமே தெரியாது என மாணிக்க சேனன் கூறியும் யாரும் நம்ப வில்லை.

அப்போது குணவதி மாணிக்க சேனனிடம் "நீங்கள் குற்றமற்றவர் என்றும் அப்பழுக்கற்றவர் என்

றும் நிரூபித்துக் காட்ட வேண்டும். இல்லாவிட்டால் இந்த நாட்டை விட்டுப் போய்விடுங்கள். அப்போதுதான் உங்களுக்கு நாடாளும் ஆசை இல்லை என்பது தெளிவாகும்'' என்றாள்.

மாணிக்கசேனனும் ''நான் ஒரு நிபந்தனையின் பேரில் நாட்டை விட்டுக் காட்டிற்குப் போய் விடுகிறேன். மந்திரிக்கு எதுவும் தெரியாது. நான் கூறியதன் பேரில் அவன் தன் மகனைப் பொக்கிஷத்திற்கு அனுப்பினான். நான் சொல்லிக் கொடுத்த பொய்களையே மந்திரி நீதி மன்றத்தில் கூறினான். அந்த மந்திரியை தண்டிப்பதில்லை என்ற வாக்குறுதி அளித்தால் நான் இங்கிருந்து போய் விடுகிறேன்'' என்றான்.

அதுகேட்டு குணவதி ஆச்சரியப்பட்டு ''அந்த மந்திரியைக் கொண்டு ஏன் இவ்வாறு பொய்களைச் சொல்ல வைத்தீர்கள்?'' என்று கேட்டாள். அதற்கு மாணிக்கசேனன் நிதானமாக ''நீங்கள் என்னிடம் காட்டும் அன்பு நிலையற்றது என்று என் குருநாதர் கூறினார். அதைப் பரீட்சிக்கவே இப்படிச் செய்தேன். நான் நாட்டின் மேன்மைக்காக எவ்வளவோ செய்தேன். அவற்றை எல்லாம் நீங்கள் மறந்து ஒருவன் என் மீது குற்றச்சாட்டுகளைக் கூறியதும் உண்மை எது என ஆராயாமல் என்னிடம் மட்டும் விளக்கம் கேட்டீர்கள். குற்றச்சாட்டுகளுக்கு என்ன ஆதாரம் என்று யாராவது மந்திரியைக் கேட்டீர்களா? மந்திரி உண்மையில் திருடன் அல்ல. ஆனால் திருடன் என்ற நிலையில் இருந்த அவன் கூறியதன் அடிப்படையில் நேர்மையான மன்னனிடம் விளக்கம் கேட்டீர்கள். இந்நாட்டில் திருடனையும் மன்னனையும் யாவரும் சமநிலை வைத்துப் பார்க்கிறீர்கள். எனவே எனக்குக் கிடைத்த பேரும் புகழும் நிலையற்றது. எனவே நிலையான ஞான மார்க் கத்திற்கே போகிறேன்'' எனக் கூறிக் காட்டிற்குச் சென்றான்.






# அதிசய மலர்

## 6

*[மாணிக்கபுர மன்னன் தன் நாட்டை ராட்சஸ மிருகத்திடமிருந்து காக்க மலைச் சாதியினரின் உதவியைக் கோர அவர்கள் இருக்கும் இடத்திற்குத் தன் மகளோடு சென்றான். மலைச் சாதியினர் அவர்களுக்கு உற்சாகமான வரவேற்பு அளித்தார்கள். அவர்களது தலைவன் சாம்பனும் உத்தமனும் அதிசய மலர்களைக் கடலில் போட்டு ராட்சஸ மிருகம் நாட்டினுள் வராமல் செய்வதாக வாக்களிக்கவே, மன்னனும் இளவரசியும் தலைநகருக்குத் திரும்பி வந்தார்கள். பிறகு—]*

மலைச் சாதியினர் மன்னன் தம் பகுதிக்கு விஜயம் செய்தது பற்றி மகிழ்ச்சி ததும்பப் பேசிக் கொண்டிருந்தார்கள். தம் இனத்து உத்தமன் அந்நாட்டு மன்னனுக்கே உதவப் போவது குறித்து அவர்கள் பெருமை கொண்டார்கள். உத்தமன் அந்த முயற்சியில் வெற்றி பெற வேண்டும் என அவர்கள் வாழ்த்தியதோடு அவனுக்கு வெற்றி அளிக்கும்படித் தம் குலதேவதையையும் வேண்டிக் கொண்டார்கள். உத்தமனைக் கௌரவிக்க உடனே ஒரு விருந்திற்கும் ஏற்பாடு செய்தார்கள்.

விருந்து முடிந்ததும் உத்தமன் எப்படி ராட்சஸ மிருகத்தை அடக்க வேண்டும் என்பது பற்றி எல்லோரும் யோசிக்கலானார்கள்.



அவர்களது தலைவன் சாம்பன் எழுந்து "அதிசய மலர் பூத்துக் கிடக்கும் இடத்தை நம் உத்தமன் நன்கு அறிவான். அதனால் நாளைக் காலை அவன் ஒரு சிலரை அழைத்துக் கொண்டு போய் மலர்களை பறித்து ஓரிடத்தில் வைக்கட்டும். இரவில் ராட்சஸ மிருகம் வரக் கூடிய அபாயம் இருப்பதால் சூரியன் மேற்கே மறைவதற்குள் மலர்களைப் சேகரித்து விடவேண்டும். மலர்களை பத்திரப்படுத்தி விட்டு எல்லோரும் இங்கு வந்து விடுங்கள். அந்த மலர்களைக் கடலுக்குள் கொண்டு போக ஒரு படகு வேண்டும். அதை நாமே தயார் செய்ய வேண்டும். இப்போது படகு வேறு எங்கும் கிடையாது" என்றான்.

அப்போது இரு வாலிபர்கள் எழுந்து "நாங்கள் கடற்கரைப் பகுதியில் சிறிது காலம் இருந்திருக்கிறோம். எங்களுக்குப் படகு தயாரிக்கத் தெரியும். நாங்கள் இரண்டு நாட்களில் தயாரித்துக் கொடுத்து விடுகிறோம்" என்றார்கள். சாம்பனும் "சரி. நீங்கள் தயாரித்துக் கொடுங்கள். உத்தமன் மலர்களைச் சேகரித்து கட்டுகளாகக் கட்டி வைக்கட்டும். அவனுடன் நாளை செல்ல யார் முன் வருகிறீர்கள்?" என்று கேட்டான்.

பல மலைச் சாதி இளைஞர்கள் தாம் செல்வதாக முன் வந்தனர். ஆனால் உத்தமன் அவர்களில் ஆறு பேர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கள் போதும் என்றான். பிறகு அவன் சாம்பனையும் மற்றுமுள்ள பெரியவர்களையும் வணங்கி அவர்களது ஆசிகளைப் பெற்றான்.

சாம்பனும் அவனைத் தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்தினான். உத்தமனும் புன்னகை புரிந்தவாறே தன் தங்கை ரஜனியுடன் தன் குடிசைக்குப் போய்ச் சேர்ந்தான். மறுநாள் விடியும் போது அவன் எழுந்து தன் ஆறு நண்பர்களையும் அழைத்துக் கொண்டு அதிசய மலர்கள் இருக்கும் மலைப் பகுதிக்குச் சென்றான்.

அவர்கள் இரண்டு மணி நேரத்தில் அம்மலர்கள் இருக்கும் பகுதியை அடைந்தார்கள். யாவரும் அந்த மலர்களைக் கிளைகளை வளைத்தும் சில சமயங்களில் கைக் கோடலிகளால் வெட்டியும் சேகரிக்கலானார்கள். இவ்வாறு சேகரிக்கப்பட்ட மலர்களைக் கட்டுகளாகக் கட்டினார்கள். இப்படியாக மாலையாவதற்குள் அங்குள்ள மலர்களை எல்லாம் பறித்துக் கட்டுகளாகக் கட்டி எடுத்துக் கொண்டார்கள். உத்தமன் அவற்றை பத்திரமாக வைக்க ஒரு பாறையின் கீழ் மரக்கிளைகளை வெட்டிப் போட்டான். அவற்றின் மீது மலர்க்கட்டுகள் வைக்கப்பட்டன.

சூரியன் மறைந்து இருட்டும் வேளைக்கு ஏழு பேர்களும் அங்கிருந்து கிளம்பி தம் இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களைக் கண்ட சாம்பன் "நீங்கள் மேற்கொண்ட வேலை வெற்றிகரமாக முடிந்ததா?" என்று கேட்டான். உத்தமனும் "எல்லாம் நல்லவிதமாகவே முடிந்தது" என்றான்.

சாம்பனும் "சரி. நாளை மாலை படகு தயாராகி விடும். நாளை மறுநாள் காலையில் இங்கிருந்து கிளம்பலாம்" என்றான். இரண்டொரு நிமிடங்களுக்குப் பிறகு அவன் "உத்தமா! நீங்களெல்லாம் மிகவும் களைத்துப் போயிருப்பீர்கள். போய்ப் படுத்து நன்றாகத் தூங்குங்கள். நான் வேறு சிலரை நம் பகுதியைக் காவல் காக்க





"சரி. நீங்கள் போகலாம்" என்று கூறவே அவர்களும் சென்று விட்டார்கள். மறுநாள் காலை உத்தமன் சாம்பனின் கட்டளைப்படி தன் நண்பர்கள் ஆறு பேர்களையும் அழைத்துக் கொண்டு சென்று முன்தினம் கட்டி வைத்த மலர்க் கட்டுகளை எடுத்து வந்தான். அவர்கள் வந்தபோது சாம்பன் படகுடன் தயாராக நின்று கொண்டிருந்தான். ரஜனியும் அவனருகே இருந்தாள். சாம்பன் அந்த மலர்க் கட்டுகளை ஆச்சரியத்துடன் பார்த்தான். அவற்றின் நறுமணம் நாலா புறமும் பரவி எல்லோர் மனதையும் மகிழ வைத்தது.

மறுநாள் சூரியோதயத்திற்கு முன் சாம்பனும் உத்தமனும் தம் ஆட்களுடன் கிளம்பினார்கள். அவர்களோடு உத்தமனின் தங்கை ரஜனியும் சென்றாள். ஆட்களில் இருவர் படகைத் தம் தோள்களில் சுமந்து கொண்டு சென்றார்கள். அவர்களை வழியனுப்ப மலைச் சாதியினர் கொஞ்ச தூரம் சென்றனர்.

சூரியன் மறையும் போது கடற்கரையை அடைந்து விடவேண்டும் என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால் அது முடியாது என்று தெரிந்து அவர்கள் நடந்து நடந்து உச்சி வேளைக்கு பாதி தூரம் சென்று ஒரு ஆலமரத்தடியே போய்ச் சேர்ந்தார்கள். அங்கு

அனுப்புகிறேன்" என்றான்.

காலையான போது சில காவல் வீரர்கள் ஓடோடி வந்தார்கள். அவர்களைக் கண்ட சாம்பன் "ஏன் இப்படி ஓடி வருகிறீர்கள்? என்ன விஷயம்?" என்று கேட்டான். அவர்களும் "நாங்கள் இருந்த பகுதியில் எதுவும் நடக்கவில்லையானாலும் வேறு எங்கோ ராட்சஸ மிருகம் வந்திருக்கிறது. ஏனெனில் எங்கோ மரங்கள் முறிந்து விழும் சத்தமும் பாறைகள் உருளும் சத்தமும் கேட்டன. பாதி ராத்திரிக்கு ஆரம்பித்த சத்தம் விடிவதற்குச் சற்று முன்தான் ஓய்ந்தது" என்றார்கள்.

சாம்பனும் அதைக் கேட்டு



சற்று வேக வேகமாக நடந்து மாலை ஆகும்போது கடற்கரையை அடைந்து விட்டார்கள்.

படகை எடுத்துக் கடலில் மிதக்க விட்டார்கள். மலர்க் கட்டு கள் அப்படகில் ஏற்றப்பட்டன. அதன் வாசனை எங்கும் பரவி யது. உத்தமன் தன் தலைவனான சாம்பனின் கால்களில் விழுந்து வணங்கினான். சாம்பன் அவனை அன்புடன் தூக்கி நிறுத்தி "நீ நிச் சயமாக உன் முயற்சியில் வெற்றி பெறுவாய். நம் குலதேவதையின் பரிபூர்ண அருள் உனக்கு உண்டு" எனக்கூறி ஆசீர்வாதம் செய்தான்.

அப்போது அருகில் இருந்த ரஜனி "அண்ணா! நீ விரைவி லேயே திரும்பி வந்து விடவேண் டும். உன்னை எதிர்பார்த்துக் கொண்டே இருப்பேன்" என்று கூறி தான் கொண்டு வந்த உணவு மூட்டையைக் கொடுத்தாள். உத்த மனும் அதை வாங்கிக் கொண்டு "இது எனக்கு வழியில் சாப்பிட உதவும்" என்று கூறினான்.

பிறகு அவன் தன் தங்கையிடம் "நீ அரண்மனைக்குப் போய் இள வரசியாருடன் தங்கி இரு. அவள் உன்னை நன்கு கவனித்துக் கொள் வாள். நானும் விரைவில் திரும்பி வந்து விடுவேன். இதை நீ இளவர சியிடமும் சொல்" என்றான்.

உத்தமன் படகில் ஏறி அமர்ந்து கொண்டான். பிறகு துடுப்பை எடுத்து வலிக்கலானான். படகு கடலில் தள்ளி விடப்பட்டது. அது ஆடி அசைந்தவாறே கடலில் சென்றது. கரையில் நின்றவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து கை களை ஆட்டி உத்தமனுக்கு விடை கொடுத்து அனுப்பினார்கள்.

சாம்பனும் "சரி. இனி நாம் செல்லலாம்" என்று கூறவே மற்றவர்களும் அவன் பின்னால் சென்றனர். சாம்பன் ரஜனிக்கு ஆறுதல் கூறியவாறே தன்னோடு அழைத்துச் சென்றான்.

எல்லோரும் தலைநகரை நோக்கி சென்றார்கள். வழியில் பாழடைந்து கிடந்த இடங்களைப் பார்த்துக் கொண்டே சென்றார்கள். இரவாகி

விட்டால் அந்த ராட்சஸ மிருகம் வந்துவிடுமே எனப் பயந்து அப் பகுதியிலிருந்து விரைவில் போய் விட வேண்டுமென்று வேகமாக நடந்தார்கள். சற்று தூரம் போன தும் அடர்ந்த காடு ஒன்று வந்தது. அடர்ந்த மேகங்கள் சூழவே எங் கும் இருள் பரவியது. அதனால் யாவரும் அங்கேயே தங்கி இர வைக் கழித்தார்கள்.

சூரிய வெளிச்சம் வந்ததும் யாவரும் கண் விழித்து அங்கி ருந்து தலைநகரை நோக்கிச் சென் றார்கள். அவர்கள் தலைநகரை அடைந்தபோது உச்சிப் பொழுதாகி விட்டது. அரண்மனையை அவர் கள் அடையவே வீரர்கள் உள்ளே போய் மன்னனிடம் அவர்கள் வந் திருப்பதைத் தெரிவித்தார்கள். மன்னனும் அவர்களை வரவேற்று அவர்கள் நாட்டிற்குச் செய்யும் அரும்பணியைப் பாராட்டினான்.

சாம்பனும் "இது எங்களின் கடமை. உத்தமன் நேற்றே கிளம் பிச் சென்று விட்டான். அவன் அதிசய மலர்களோடு போய் ராட் சஸ மிருகத்தை எதிர்ப்பான்" என் றான். மன்னனும் "மிக்க மகிழ்ச்சி. ரஜனி! இப்படி வா" என்று அழைத்தான்.

இதற்குள் இளவரசி பிரியம் வதை வந்து ரஜனியைக் கண்டு "வா! வா. இனி என் ஆருயிர் சினேகிதி" எனக்கூறி அவளை அழைத்துக் கொண்டு தன் அந்தப் புரத்திற்குள் சென்றாள். ரஜனி யும் "என் அண்ணன் ராட்சஸ மிரு கத்தை எதிர்க்கச் சென்று விட்டான். அவன் வெற்றிபெற்று விரைவி லேயே திரும்பி வந்து விடுவான். இதை உங்களிடமும் தெரிவிக்கச் சொன்னான்" என்று கூறினாள்.

இளவரசியும் "அப்படியா! உன் அண்ணன் வெற்றியுடன் திரும்பி வருவார் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என மகிழ்ச்சியுடன் கூறினாள்.

(தொடரும்)



# எனக்கே புரியவில்லையே!

வேதபுரத்தில் வெங்கடாத்திரி என்ற வேதாந்தி இருந்தார். அவர் வேதாந்த சம்மந்தமாய் பல சிக்கலான பிரச்னைகள் குறித்து பல நூல்களை எழுதினார். இவற்றில் பல விஷயங்களைப் பண்டிதர்களால்கூடப் புரிந்து கொள்ள முடியவில்லை.

அவரது நூல்களுக்கு விளக்க உரை எழுத கிருஷ்ணபட்டர் என்பவர் முயன்றார். ஆனால் அவருக்கு சில இடங்களில் பொருள் புரியாமல் போகவே பலரிடம் அதுபற்றிக் கேட்டுப் பார்த்தார். யாராலும் பொருள் கூற முடியவில்லை.

அவர்படும் அவஸ்தை கண்டு அவரது மனைவி "நீங்கள் வெங்கடாத்திரியின் மனைவியிடம் கேட்டால் ஒருவேளை அர்த்தம் தெரியலாம்" என்று யோசனை கூறினாள். கிருஷ்ணபட்டரும் வெங்கடாத்திரியின் வீட்டிற்குச் சென்று அவரது மனைவியிடம் "உங்கள் கணவர் தம்நூல்களை உங்களது ஊக்கத்தால் எழுதி இருக்கலாம். அதில் சில இடங்களில் எனக்குப் புரியாத விஷயங்கள் உள்ளன. உங்களால் அவற்றின் பொருளைக் கூற முடியுமா?" என்று கேட்டார்.

அவளோ "நான் இவரைக் கல்யாணம் செய்து கொண்டு ஐம்பது வருஷமாகிறது. இவ்வளவு காலமாகியும் இவரையே என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே. இவர் எழுதியதற்கு அர்த்தமா சொல்ல முடியும்?" என்றாள்.

அதுகேட்டு கிருஷ்ணபட்டர் திகைத்து நின்றார்.!






# கவிஞன் போக்கு

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் இங்கு ஏதோ சபதமோ அல்லது விரதமோ மேற்கொண்டவன் போல முழுமூச்சுடன் இந்த வேலையில் ஈடுபட்டிருக்கிறாயே. சில சமயங்களில் இவற்றை நிறைவேற்ற முடியாமல் போவதும் உண்டு. இதற்கு உதாரணம் கவிஞனான இந்துசேகரன். அவன்தான் பணத்திற்காக கவிதை புனைவதில்லை எனக் கூறி பலரையும் கேலி செய்து கவிதை எழுதினான். ஆனாலும்

## வேதாளம் சொல்லும் கதை



தான். அவன் தன் கவிதைகளால் பலரையும் கேலி செய்து எழுதிய தால் மக்கள் அவற்றை விரும்பிக் கேட்கலாயினர்.

ஒருமுறை சமஸ்தானக் கவிஞர் கலாதாசர் இந்துசேகரன் இருந்த ஊருக்கு வந்தார். அங்கு அவரை தனசேகரன் என்ற பணக்காரன் வரவேற்று மரியாதை செய்தான். பேச்சுவாக்கில் தனசேகரன் இந்து சேகரனைப் புகழ்ந்து கூறவே கலா தாசர் இந்துசேகரனைக் காணச் சென்றார். அவர் தம்மை இன்னார் என அறிமுகம் செய்து கொண்டு அவனது கவிதைகளைக் கேட்க விரும்புவதாகக் கூறினார்.

அவன் பணத்திற்கு அடிமையாகிக் கவிதை எழுதினான். அவன் கதை யைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

காஞ்சனபுரத்தைக் காந்திவர் மன் என்ற மன்னன் ஆண்டு வந் தான். அவன் எங்கு போனாலும் தான் மன்னன் என கர்வம் கொள் ளாமல் சகஜமாக எல்லோருடனும் பழகுவான். அவனுக்குக் கோபமே வராது. அவன் பொறுமைசாலி என்று பெயர் பெற்று விட்டான்.

அந்நாட்டில் இந்துசேகரன் என்ற கவிஞன் இருந்தான். அவன் சாதுரியமாய்க் கவிதை புனைப வன் என்று பெயர் பெற்றிருந்

இந்துசேகரனோ ''நீங்கள் தன சேகரன் சொன்னதை அப்படியே நம்பி விட்டீர்களா? அவனது பரம விரோதியான மாணிக்கவர்மனைக் கேலி செய்து கவிதை கூறினேன். அதுகேட்டு கூடி இருந்தோர் கை தட்டினார்கள். அதனால் தனசேக ரன் என்னைப் பாராட்டுகிறான். அவனைக் கேலி செய்து நான் கவிதை கூறினால் அவன் இதே அபிப்பிராயத்தைத் தெரிவிப்பானா என்பது சந்தேகம்தான்'' என்றான்.

அப்போது கலாதாசர் ''நீங்கள் தனசேகரனைப் புகழ்ந்து எழுதிய கவிதைகளைப் படித்தேன். அதி லிருந்து நீங்கள் அவன் மீது எவ் வளவு மதிப்பு வைத்திருக்கிறீர்கள் என்று தெரிகிறது'' நீங்கள் இது

போல இந்நாட்டு மன்னரையும் புகழ்ந்து எழுதி நிறையப் பணம் சம்பாதித்து சுகமாக வாழலாமே'' என்றார். அதற்கு அவன் ''நான் உயர்ந்த மன்னரான காந்திவர் மரை என் கவிதைகளைக் கூறி தாழ்த்த விரும்பவில்லை'' என் றான்.

கலாதாசர் அப்போது எதுவும் சொல்லவில்லை. அவர் தலை நகருக்குப் போனதும் மன்னனைக் கண்டு இந்துசேகரனைப் பற்றிக் கூறினார்.

காந்திவர்மனும் உடனே இந்து சேகரனை அழைத்து வரச் சொன் னான். அவன் வந்ததும் ''நீ சிறிது காலம் என் தர்பாரில் இருந்து கவிதைகள் புனைந்து என்னை மகிழ்வி. நீ விரும்பினால் ஆஸ் தான கவிஞராகக் கூட இருக்க லாம். அப்படி விரும்பாவிட்டால் உன் ஊரில் சுகமாக நீ வாழ எல்லா ஏற்பாடுகளையும் செய் கிறேன்'' என்றார்.

இந்துசேகரனும் ''அரசே! தங் களை என் கவிதைகளால் மகிழ் விக்கிறேன். ஆனால் ஒரு வேண்டு கோள். நான் எழுதும் கவிதை களை முதலில் நீங்கள் மட்டுமே கேட்க வேண்டும். அதற்குப் பிறகே தர்பாரில் பிறர் கேட்க அவற்றை நான் கூறுவேன்'' என்றான்.

மன்னனோ ''அப்படி வேண் டாம். சபையோரில் ஒருவனாக



நானும் இருந்து முதல் தடவையாக உன் கவிதைகளைக் கேட்பதில் ஆனந்தம் ஏற்படும்'' என்றான். அதற்கு இந்துசேகரன் இணங் காது போகவே மன்னன் அவனது வேண்டுகோளை ஏற்றான்.

ஒருநாள் இந்துசேகரன் மன்ன னிடம் ''அரசே! உங்களது சமை யல்காரனுக்கு ஒரு சமையல்காரன் இருப்பதைக் க்ண்டேன். அது எனக்கு ஆச்சரியத்தை அளித் தது. ஏனென்றால் உங்கள் சமை யல்காரன் செய்வதை எல்லாம் கொஞ்சம் கூட மிச்சம் வைக்கா மல் ருசியாக இருக்கிறது என்று நீங்கள் சாப்பிட்டு விடுகிறீர்கள். மேலும் அரச காரியங்களில் மூழ்கி



இருப்பதால் தாங்கள் உணவின் ருசி பற்றிக் கூடக் கவலைப்படுவதில்லை. அதனால் தங்கள் சமையல்காரன் தான் ருசியாக உண்ண ஒரு சமையல்காரனை வைத்துக் கொண்டிருக்கிறான்" என்று பொருள்படக் கவிதை கூறினான்.

அதைக்கேட்ட மன்னன் விழுந்து விழுந்து சிரித்தான். அதன் பிறகு அக்கவிதை தர்பாரில் படிக்கப் பட சபையோரும் ரசித்தனர்.

காந்திவர்மனுக்கு நான்கு அமைச்சர்கள் இருந்தார்கள். அவர்கள் நால்வரும் அவனது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். மன்னன் அவர்களைக் கலக்காமல் எந்த முடிவும் எடுக்க மாட்டான். அந்த நால்வரில் முக்கியமானவர் வீர சேனன். அவர் மன்னரைத் தான் சொல்வதை எல்லாம் கேட்க வைத்து நடக்க வைக்கிறார் என்பது பரவலாகப் பேசப்பட்டு வந்தது.

இந்துசேகரன் அவரைப் பற்றி கவிதை புனைந்து மன்னனுக்குப் படித்துக் காட்டினான். "அரசர் விரும்பாத ஒரு செயலை வீரசேனர் சொல்லி செய்ய வைத்தார். அதனால் மன்னர் மிக நல்ல பலன் களையே அடைந்தார். அதனால் மன்னர் மகிழ்ந்து அவருக்குத் தங்கக் கடயம் ஒன்றை பரிசளித்தார். ஆனால் வீரசேனர் அது தனக்கு வேண்டாம் எனக் கூறி அதை விடச் சிறிய கடயமாகக் கொடுக்க வேண்டினார். மன்னரே எல்லோரும் பெரிதாகக் கேட்பார்கள். நீங்கள் சிறிதாக வேண்டும் என்கிறீர்கள். என்ன காரணம்." என்று கேட்டார்.

அமைச்சரும் "அது என் மனைவிக்கு அணிவிக்கத்தான்" எனவே மன்னனும் அதை நீங்களே செய்து போட்டு விடலாமே என்றார். அதற்கு அமைச்சர் நான் தங்களுக்குக் கூறிய யோசனை என் மனைவி என்னிடம் கூறியதே. அதனால் இந்தக் கடயம் அவளுக்கே சேர வேண்டும்" என்றார்.

இந்தக் கருத்துள்ள கவிதையைக் கூறியதும் மன்னன் "ஓகோ! வீரசேனர் தம் மனைவி கிழித்த

கோட்டைத் தாண்டாதவர் என்று எல்லோரும் சொல்வதைக் கவிதை வடிவில் கொடுத்து விட்டீர்களே'' என்று கூறி பலமாகச் சிரித்தான்.

காந்திவர்மனின் மற்றொரு மந்திரி பலசேனன். அவன் இராணுவத் துறையை கவனித்து வந்தான். அவன் பேசினாலே கிடுகிடு என்று நடுங்குவார்கள். ஆனால் அவனோ குச்சி போல மெலிந்து இருப்பான். எனவே இந்துசேகரன் அவனைப் பற்றிய கவிதையில் "அரசரின் கருணைதான் என்னே! பலமற்றவர்களைப் பாதுகாக்க வீரர்களை அனுப்புகிறார். நம் பலசேனருக்கும் வீரர்களைக் கொடுத்திருக்கிறார்'' என்று எழுதிப் படித்தான்.

மன்னன் அக்கவிதையை வெகுவாக ரசித்தான். மூன்றாவது மந்திரி நாகசேனன் இளகிய மனம் கொண்டவன். யாராவது கஷ்டப்படுவதைக் கண்டால் அவன் கண்களில் கண்ணீர் வடிப்பான். நாகசேனனுக்கு ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை.

இந்துசேகரன் நாகசேனனைப் பற்றி ஒரு கவிதை எழுதினான். "ஒருமுறை நான் நாகசேனனின் வீட்டிற்குப் போனேன். அப்போது அவர் விக்கி விக்கி அழுது கொண்டிருந்தார். என்னைக் கண்ட அவரது மனைவி நீங்கள் தப்பாக நினைக்காதீர்கள். எனக்குப் பிள்ளை இல்லாத துயரைப்போக்க இப்படியெல்லாம் செய்கிறார்''





இதை மனதில் கொண்டு இந்து சேகரன் ஜகவீரனைப் பற்றி ஒரு கவிதை புனைந்தான். அவன் ஒரு முறை வைகுண்ட ஏகாதசியன்று பரமபத சோபனப் படத்தில் காய் வைத்து விளையாடிக் கொண்டிருந்தான். அப்போது பெரிய பாம்பினருகே அவனது காய் போன போது அத்னைத் தூக்கி வைத்தான். அப்போது அவனோடு விளையாடினவன் "அப்பனே! அது ஏணி இல்லை, பாம்பு" என்றான். அதற்கு அவன் "எனக்கு பாம்பே ஏணி" என்றான்.

இக்கருத்துள்ள கவிதையைக் கேட்டதும் மன்னனின் முகம் சிவந்தது. அவன் உடனே "இந்து சேகரா! இவ்வளவு நாட்களாக உன்னை உயர்ந்தவன் என்றும் உன் கவிதை தரமானது எனவும் எண்ணி வந்தேன். நீ மகா மட்டமானவன் என்றும் நீ பிறரை அவமான்ப்படுத்த எவ்வளவுக்குத் தாழ்ந்து போவாய் என்பது இன்று தான் தெரிந்தது. ஜகவீரன் திறமையற்றவன் என்றும் குத்திக் காட்டினாய். இது உண்மையல்ல. அவனது யோசனைகளால் நான் பெரிதும் பயனடைந்திருக்கிறேன். அது பற்றி உனக்குச் சொல்லட்டுமா?" என்று கேட்டான்.

மன்னன் இவ்வாறு கூறியது கேட்டு இந்துசேகரன் ஆச்சரியப் பட்டான். ஆயினும் சாவதான

என்றாள்." அக்கவிதையைக் கேட்ட மன்னன் வெகுநேரம்வரை சிரித்தான்.

நான்காவது அமைச்சர் ஜக வீரன் இளைஞன். மன்னனுக்கு அவன் தேவையே இல்லைதான். ஆனாலும் ஏதோ பாசம் காரணமாக மன்னன் அவனை அப்பதவியில் வைத்திருந்தான். ஏனெனில் சில வருடங்களுக்கு முன் அவன் மன்னனை பாம்பு கடிக்காமல் காப்பாற்றினான். பாம்பு ஜக வீரனைத் தீண்டியது. விஷம் பரவு முன் மன்னன் அவனுக்கு சிகிச்சை செய்ய வைத்துக் காப்பாற்றிப் பதவியையும் அவன் கேட்டதன் பேரில் அளித்தான்.

மாக "அரசே! இக்கவிதையை நான் சபையில் படித்துக் காட்ட லாமா?" என்று கேட்டான்.

மன்னனோ "இத்தகைய கவி தைகளை சபையில் நீ கூறினால் உனக்குக் கெட்டபெயர்தான் வரும். ஜகவீரனின் மனம் வருந் தும். நீ ஏனோ ஜகவீரனை இப் படி அவமானப்படுத்த எண்ணி னாய். அவனைப் பற்றி வேறு ஒரு கவிதை எழுதிக் கொண்டு வா. அதைப் பார்க்கலாம்" என்றான்.

இந்துசேகரன் பணிவுடன் "அரசே! தாங்கள் என்னை மட்ட மானவன் என்று கூறி விட்டீர்கள். அதனால் இனி நான் உங்களுக்கு என் கவிதைகளைப் படித்துக் காட்ட முடியாது. தாங்கள் விரும் பினால் தங்கள் மீது ஒரு காவியம் எழுதிக் கொடுத்துவிட்டு என் ஊருக்கு போய் விடுகிறேன்" என் றான்.

மன்னன் என்ன சொன்ன போதி லும் இந்துசேகரன் கேட்கவே இல்லை. அவன் காந்திவர்மன் விஜயம் என்ற காவியத்தை எழு திக் கொடுத்துவிட்டு மன்னன் அளித்த ஏராளமான பரிசுகளோடு தன் ஊருக்குச் சென்று விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே. இந்துசேகரன் மன் னன் பாராட்டிய வரை மற்றவர் களை கேலி செய்து கவிதைகள் புனைந்து வாசித்துக் காட்டினான்.



ஆனால் மன்னன் முதல்முறையாக அவன் மட்டமானவன் என்று கூறி யதும் அவனுக்காக இனிக் கவிதை கள் புனைய முடியாது என்று கூறிவிட்டான். ஆஸ்தான கவிஞர் கலாதாசர் முதலில் இந்துசேக ரனைச் சந்தித்தபோது மன்னன் மீது ஒரு காவியம் இயற்றச் சொன் னார். அதை அப்போது இந்து சேகரன் ஏற்கவில்லை. ஆனால் முடிவில் அவன் ஒரு காவியத்தை எழுதி மன்னனிடம் கொடுத்துப் பரிசுகளைப் பெற்றுச் சென்றான். அதற்குக் காரணம் மன்னனுக்குத் தன் மீது கோபம் வந்துவிட்டது என அவன் பயந்ததாலா அல்லது பணம் வேண்டும் என்ற ஆசை

யாலா? இதற்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''இந்துசேகரன் தன் போக்கில் கவிதை புனைப வன். மன்னன் அவனை வர வழைத்து அவனது கவிதைகளைச் சபையில் கூறி எல்லோரையும் மகிழ்விக்கச் சொன்னபோது இந்து சேகரன் மன்னன் அளித்த சுதந்தி ரத்தை அத்துமீறிப் பயன்படுத்தக் கூடாது என்று எண்ணியே முத லில் மன்னனுக்குப் படித்துக் காட்டிவிட்டே பிறகு சபையில் படிப்பதாக உறுதியுடன் கூறினான். எல்லோரையும் பற்றிக் கவிதை கள் புனைந்து கூறியபோது ரசித்த மன்னன் ஜகவீரனைப் பற்றி இந்து சேகரன் கூறிய கவிதை கேட்டு அவனை மட்டமானவன் என்று கூறினான். அதுவரை இந்துசேக ரன் மன்னனை பாரபட்சம் காட் டாதவன் என நினைத்திருந்தான். ஆனால் தன் உயிரைக் காப்பாற் றிய அவனுக்கு மன்னன் பரிந்து கொண்டு வந்தான். அதுவரை தனக்கு பணமே கேளாத இந்து சேகரன் மன்னனுக்கும் விருப்பு வெறுப்பு இருப்பதால் என்றாவது ஒருநாள் அவன் வெறுப்படைய லாம் என்று நினைத்தே மன்னன் மீது காவியம் புனைந்து பரிசு களைப் பெற்றுக் கொண்டு தன் ஊருக்குப் போய் சுகமாக வாழ்ந் தான். எனவே அவன் மன்னனி டம் பயம் கொள்ளவில்லை, பணத்தாசையும் இல்லை என்பது தெளிவாகத் தெரிகிறது'' என் றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உட லோடு வேதாளம் உயரக் கிளம் பிப் போய் மீண்டும் மரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—59

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

# சாரஸப் பறவைகள்



கொக்கு இனத்தைச் சேர்ந்த இப் பறவைகள் சுமார் ஐந்தடி உயரமானவை. மிக அழகான இவற்றின் உடல் சாம்பல் நிறத்தில் இருக்கும். இதன் கால்களும் சிவப்பாக இருக்கும். கழுத்தின் கீழ்பகுதியும் இறக்கைகளும் வெள்ளையாக இருக்கும்.

கொக்கு இனத்திலேயே மிகப் பலமுள்ளது. சாரஸக் கொக்கே. இது மிகவும் துணிச்சலானது. மனிதர்களைக் கண்டு சற்றும் பயப்படாது. புழு பூச்சிகளை வயல்களிலிருந்தும் தானியங்களிலிருந்தும் எடுத்து உண்ணும். இது மனிதர்கள் வாழும் இடத்திற்கு அருகிலேயே வசிக்கும்.

இப்பறவைகள் ஜோடி ஜோடியாகத்தான் வாழும். இவை ஒன்றை மற்றது மிகவும் நேசித்து அன்புடன் வாழுமாம். இவற்றில் ஒன்று இறந்துவிட்டால், மற்றது ஏங்கி சில நாட்களுள் இறந்தும்விடுமாம். வால்மீகி வேடனாக இருந்தபோது இந்த சாரஸ பட்சி எனப் படும் க்ரௌஞ்சப் பட்சி ஜோடியில் தான் ஒன்றைக் கொன்றாராம்.

பறக்கும் பறவைகளில் இதுதான் மிகவும் உயரமானது. மெதுவாகப் பறந்து தன் இறக்கைகளை அகல விரித்துச் செல்வது அழகாக இருக்கும். சில சமயத்தில் விசித்திரமாகக் கூவும். இவை குச்சிகளாலும், புல்லாலும் பெரிய பெரிய கூடாகக் கட்டி அதில் முட்டை இடும்.








## ஜைமினி ராய்

ஜைமினி ராயின் ஓவியங்களைப் பார்க்கும்போது நாம் பரவசப்படுகிறோம். அவை நமக்கு மிகவும் அறிமுகமானவைபோலத் தென்படும். பாரதப் பழங்கால முறையோடு தற்கால பாணியில் அழகாக ஓவியங்களை இவர் தீட்டுவதால் நாம் அவ்வாறு உணர்கிறோம். இப்படிச் சித்தரிப்பதுதான் ஜைமினி ராயின் கைவந்த கலை.

மேற்கு வங்காளத்தில் பங்கூரா மாவட்டத்தில் பெலிதோல் என்ற கிராமத்தில்

ஜெமினிராய் 1887ல் பிறந்தார். மற்ற கிராமத்தவர் போலவே அந்த கிராம வாசிகளும் பல தொழிலகளைச் செய்து வந்தனர். சிறுவனாக இருந்த ஜைமினி ராய் பானைகள் செய்வோரையும் பொம்மைகள் செய்வோரையும் மரவேலை செய்வோர்களையும், துணி நெய்பவர்களையும், சித்திரங்கள் வரைபவர்களையும் உன்னிப்பாக மணிக்கணக்கில் கவனித்துக் கொண்டே வந்தார். அதிலும் துணி





களின்மீது வண்ணச் சித்திரங்களை வரைபவர்களை குறிப்பாக பார்த்துக் கொண்டே பொழுதைக் கழிப்பார்.

அவற்றைப் பார்த்தபின் ஜைமினி ராய் தாமே சித்திரங்களை வரைய ஆரம்பித்தார். இக்கலையில் இவர் கொண்டிருந்த ஆர்வத்தைக் கண்ட இவரது தந்தை இவரைக் கல்கத்தாவிலுள்ள அரசாங்கக் கலைப் பள்ளியில் சேர்த்தார். அப்பள்ளியில் மேற்கத்திய பாணியில் சித்திரம் வரையவே அதிகமாகக் கற்றுக் கொடுத்தார்கள். ஜைமினிராய் அதில் சிறந்து விளங்கினார். யாவரும் அவரைப் பாராட்டினார்கள். ஆனால் ஜைமினிராய் தனக்கெனத் தனிப் பாணியை அமைத்துக் கொள்ளத் தீர்மானித்து அதற்கான முயற்சிகளையும் செய்யலானார்.

பழங்குடி மக்களின் வாழ்முறைகளை அதே பழங்கால முறையில் அவர்கள் உபயோகிக்கும் வண்ணங்களிலேயே ஜைமினிராய் சித்தரிக்கலானார். அந்த ஓவியங்களில் புதிய முறை பளிச்செனத் தெரியலாயிற்று. அவை யாவரையும் வெகுவாகவும் கவரலாயின. அவரது திறமை வெளிப்பட்டு எங்கும் பாராட்டப்பட்டது.

ஜைமினிராய் பல இளம் ஓவியங்களைக் கவர்ந்து தம் பாணியில் வரையச் செய்து நம் நாட்டு ஓவியக் கலை 'குக் கொண்டு வந்தார். இததகைய அரும்பெரும் ஓவியரை நாம் 1972 ஏப்ரலில் இழந்துவிட்டோம்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. பங்களாதேஷ் எப்போது உருவானது?
2. ஜீலம் நதியின் பழங்காலப் பெயர் என்ன?
3. இரண்டாவது உலகப் போருக்குப் பின் 1945ல் இரண்டாகப் பிரிந்த ஜெர்மனி எப்போது சேர்ந்து ஒரே நாடாகியது?
4. 'நல சரோவர்' என்ற பறவைகள் சரணாலயம் எந்த மாநிலத்தில் உள்ளது.?
5. 'புனித ரோமன் சாம்ராஜ்யத்தில்' 'புனிதமும் இல்லை. சாம்ராஜ்யமும் இல்லை' என்று கூறி அதை நாசப்படுத்திய உலகத் தலைவர் யார்?
6. சிக்கிம் நம் நாட்டின் 22வது மாநிலமாக எப்போது ஆனது?
7. சூரியனைவிட 28 மடங்கு ஒளிவீசும் நட்சத்திரம் எது?
8. நம் அரசியல் சட்டப்படி எவ்வளவு தேசீய மொழிகள் உள்ளன?
9. பழங்கால ஒலிம்பிக் பந்தயத்திற்கும் தற்கால ஒலிம்பிக் பந்தயங்களுக்கும் இடையில் 1500 ஆண்டுகள் இடைவெளியாகும். தற்கால ஒலிம்பிக் பந்தயங்கள் எப்போது ஆரம்பமாயின்?
10. பூஜ்யத்தை ஒரு எண்ணாக முதலில் உபயோகப்படுத்திய இந்திய வல்லுநர் யார்?
11. வைத்தியத்தில் அதிகமாக உபயோகப்படும் மரம் எது?
12. உலகிலேயே மிகச் சிறிய நாடு எது?
13. பல்லவர்கள் கட்டிய கலை அழகு கொண்ட கோவில் எது?
14. 13,000 தீவுகள் அடங்கிய நாடு எது?
15. நம் நாட்டு அணு விஞ்ஞானி டாக்டர் ராமண்ணா மற்றொரு துறையிலும் வல்லவர். அத்துறை யாது?

## விடைகள்

1. 1971 மார்ச் 21
2. விதஸ்தா
3. 1990 அக்டோபர் 3
4. குஜராத்
5. நெப்போலியன் போனாபர்ட்
6. 1975
7. சிரியஸ்
8. பதினைந்து
9. 1896
10. பிரம்ம குப்தன்
11. வேப்பமரம்.
12. வாடிகன் நகரம்
13. மாமல்லபுரம் கடற்கரைக் கோவில்
14. இந்தோனேஷியா.
15. பியானோ வாசிப்பு.




# கவிஞன் ஆனானே!

ஒரு காட்டின் ஓரமாக ஒரு சிறு கிராமம் இருந்தது. அதில் சிவனடியான் என்ற விறகு வெட்டி தன் மனைவி கங்காவுடனும் மகன் பரமனுடனும் வாழ்ந்து வந்தான். சிவனடியானுக்குச் சிறு வயதிலேயே படிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஆனால் அவனது தந்தை அவனைப் பள்ளிக்கு அனுப்பாமல் விறகு வெட்டத் தன்னுடன் காட்டிற்கு அழைத்துச் சென்று வரலானான். இவ்வாறு வளர்ந்து பெரியவனான சிவனடியான் தன் மகன் பரமனையாவது நன்றாகப் படிக்க வைப்பது என்று தீர்மானித்து அவ்வூர்த் திண்ணைப் பள்ளியில் தன் மகனைச் சேர்த்தான்.

ஆனால் பரமனுக்குப் படிப்பில் அக்கறை இல்லாமல் விளையாட்டில்தான் கவனம் இருந்தது. அதனால் பள்ளி ஆசிரியர் சிவனடியானைக் கண்டு அவனது மகன் படிப்பில் கவனம் செலுத்தாமல் இருப்பது பற்றிக் கூறினார்.

அதுகேட்டு சிவனடியான் தன் வீட்டிற்குப் போனதும் தன் மகனை நான்கு அடிகள் அடித்து "ஏண்டா! பள்ளிக் கூடத்தில் ஏன் படிப்பதில்லை?" என்று கேட்டான். பரமனோ "எனக்குப் படிக்க விருப்பம் இல்லை. நானும் உன்னோடு காட்டிற்கு வந்து விறகு வெட்டுகிறேன்" என்றான். அதுகேட்டு சிவனடியான் தன் மகன்ன அடிக்கக் கையை ஓங்கவே பரமனும் "நீயே படிக்காத போது நான் ஏன் படிக்க வேண்டும்?" என்று எதிர்க் கேள்வி கேட்டான்.

அதுகேட்டு சிவனடியான் திகைத்து நின்றான். அவன் தன் மனைவியிடம் "கேட்டாயா உன்

—சிவனார் செல்வன்—



மகன் சொன்னதை? என்னையே கேலி செய்கிறான். நான் படித்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்'' என்றான். அவன் மனைவியும் ''ஏதோ அறியாப் பையன். என்னவோ சொல்லிவிட்டான். நான் சிறு வயதில் பள்ளிக்கூடத்தில் படித்திருக்கிறேன். எனக்குக் தெரிந்ததை உங்களுக்குக் கற்றுக் கொடுக்கிறேன். எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ளுங்களேன்'' என்றாள்.

அன்றிரவே அவள் ஒரு எழுது பலகையைத் தன் கணவனிடம் கொடுத்தாள். அதில் எழுத்துக்களை எழுதி அவற்றின் மீது எழுதி எழுதிப் படிக்கச் சொன்னாள். அவனும் அன்றிரவு வெகுநேரம் வரை விழித்து எழுதிப் பழகிப் படுத்துத் தூங்கினான். மறுநாள் காலை நேரம் கழித்து அவன் எழுந்தான். அதனால் சரியாகக் கூடச் சாப்பிடாமல் கோடாலியை எடுத்துக் கொண்டு காட்டிற்கு ஓடினான். இப்படியே ஒருவார காலத்திற்கு நடந்தது.

அப்போது சிவனடியான் இனி மேல் எழுதிப் பழகுவதையே விட்டுவிடப் போவதாகத் தன் மனைவியிடம் கூறினான். ஆனால் அவன் மனைவியோ ''கூடாது. நான் இனி நீங்கள் காட்டிற்குப் போகும்போது எழுது பலகையில் எழுத்துக்களை எழுதிக் கொடுக்கிறேன். உச்சி வேளையில் இளைப் பாறும்போது அவற்றின் மீது எழுதி எழுதிப் பழகுங்கள்'' என்று யோசனை கூறினாள். சிவனடியானும் அதனை ஏற்று அதன்படி நடந்தும் வரலானான்.

ஒருநாள் குதிரை மீதேறி அக் காட்டு வழியே சென்ற ஒருவன் சிவனடியான் மரக்கிளையில் கட்டித் தொங்கவிட்டிருந்த எழுது பலகையைப் பார்த்தான். அதில் சிவனடியான் எழுதி எழுதிப் பழகுவதையும் பார்த்தான். அவனிடம் அந்த வழிப் போக்கன் ''என்னப்பா இது? விறகு வெட்ட இங்கே வந்துவிட்டு எழுதிப் பழகுகிறாயே. ஏன்?'' என்று கேட்டான்.

சிவனடியானும் "நான் சிறு வயதில் படிக்க ஆசைப்பட்டேன். ஆனால் படிக்க முடியவில்லை. என் மனைவி அளித்து வரும் ஊக்கத்தால் இப்போது கற்க முயல்கிறேன்" என்று விவரமாகக் கூறினான்.

வழிப்போக்கனும் அவனைப் பாராட்டி அவனது முகவரியை வாங்கிக் கொண்டு "நீ தொடர்ந்து படித்துக் கொண்டே இரு. விட்டு விடாதே" என்று கூறிவிட்டுச் சென்றான். இதற்கு நான்கு வாரங்களுக்குப் பின் ஒருநாள் மாலை சிவனடியான் வீட்டிற்குத் திரும்பி வந்தபோது அவன் மனைவி அவனிடம் "நீங்கள் என்றோ ஒருநாள் காட்டில் ஒரு வழிப்போக்கரைச் சந்தித்தீர்களாமே. அவர் தன் வேலையாளிடம் உங்களுக்குச் சில புத்தகங்களைக் கொடுத்து, எழுத கற்றுக் கொண்டால் போதாது, இவற்றைப் படிக்கவும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று உங்களிடம் சொல்லச் சொன்னாராம்" என்றாள்.

அன்று முதல் சிவனடியானுக்குப் புதிய உற்சாகம் பிறந்தது. இரவு வேளைகளில் உட்கார்ந்து சிறு சிறு சொற்களை எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டான். தன் தந்தை படிப்பதைக் கண்ட பரமன் அவனைப் போலவே தன் பள்ளிப் புத்தகங்களை எடுத்துப்



படிக்கலானான்.

ஒரு நாள் சிவனடியானுக்கு தான் படித்த புத்தகத்தில் ஓரிடத்தில் சந்தேகம் வந்தது. அதைத் தன் மனைவியிடம் கேட்க அவள் "எனக்கும் தெரியாது. நீங்கள் படிப்பில் என்னையும் மிஞ்சி விட்டீர்கள். இனி உங்கள் சந்தேகங்களை எல்லாம் நம் ஊர் பண்டிதர் கோபால சர்மாவிடம்தான் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்" என்றாள்.

அவன் காட்டின் அழகை எல்லாம் தனக்குத் தோன்றிய விதத்தில் ஒரு காகிதத்தில் எழுதினான். அதை ஒரு தடவை திரும்பப் படித்து அவன் பெரும் மகிழ்ச்சி




அடைந்தான். மறுநாள் அதை எடுத்துப் போய் கோபால சர்மாவிடம் காட்டினான்.

கோபால சர்மா அதைப் படித்துவிட்டு "என்னடா இது! கவிதை எழுத ஆரம்பித்து விட்டாயா? இந்த மாதிரி பைத்தியக்காரத்தன வேலையில் இறங்கினால் நீ சோற்றுக்கே தாளம் போட வேண்டிய நிலை வந்து விடும். அதனால் இப்படியெல்லாம் எழுதுவதை விட்டுவிட்டு பேசாமல் விறகு வெட்டிப் பிழை" என்று கூறி அவனை அனுப்பினார்.

சிவனடியான் உற்சாகம் இழந்து வீட்டிற்குப் போய்த் தன் மனைவியிடம் நடந்ததைக் கூறினான். அவளும் அவன் எழுதியதை வாங்கிப் படித்துவிட்டு "ஆகா! எவ்வளவு நன்றாக இருக்கிறது! இதைப் பாராட்ட மனம் இல்லாமல் உங்கள் மீது பொறாமைப் பட்டுத்தான் அந்த கோபால சர்மா உங்களைக் கவிதை எழுத வேண்டாம் என்று சொல்லி இருக்கிறார். இனிமேல் அவரைப் பார்க்கப் போகாதீர்கள்" என்று கூறினாள்.

இதற்குப் பின் இரண்டு மாதங்கள் கழிந்தன. அவ்வூருக்கு அரசாங்க வீரர்கள் வந்து பறை சாற்றினார்கள். அவர்கள் அறிவித்தது என்னவென்றால் புத்தாண்டு பிறக்கும்போது தலைநகரில் கவிதைப் போட்டி நடைபெறும் என்றும் அதில் யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம் என்பதேயாம்.

சிவனடியானின் மனைவி தன் கணவனிடம் "நீங்கள் இந்தப் போட்டியில் கலந்து கொள்ளுங்கள். ஒருவேளை உங்களுக்குப் பரிசு கிடைக்கா விட்டாலும் மற்றவர்களின் கவிதைகள் எப்படிப் பட்டவை என்பதை தெரிந்து கொள்ளலாம்" என்றாள்.

சிவனடியானும் தன் மனைவி அளித்த உற்சாகத்தால் தலைநகருக்குப் போய்க் கவிதைப் போட்டியில் கலந்து கொண்டான்.

எல்லோரும் தம் கவிதைகளைக்

கூறினார்கள். சிவனடியானும் தன் கவிதையான 'காட்டுப் பூனை' என்பதைப் படித்துக் காட்டினான். அதில் இயற்கையின் வர்ணனை மிகுதியாக இருந்தது. நடுவர்கள் அந்தக் கவிதையைச் சிறந்ததாகப் பரிசிற்குத் தேர்ந்தெடுத்தார்கள்.

இதைக்கேட்ட சிவனடியானின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. மன்னரும் அவனைப் பாராட்டிப் பரிசளித்தார். அப்போது அவன் "இன்று நான் இப்பரிசைப் பெறக் காரணமாக இருந்தவர் நான் முன்பின் அறியாத ஒருவர். அவர் என்னைத் தொடர்ந்து படிக்கச் சொல்லிப் பல புத்தகங்களையும் எனக்கு அனுப்பினார். இந்த சந்தர்ப்பத்தில் அவரைக் கண்டு நன்றி செலுத்த முடியவில்லையே என்றுதான் வருத்தப்படுகிறேன்" என்றான்.

அப்போது மன்னர் "அவர் உன் நன்றியை ஏற்றுக் கொண்டு விட்டார். அவர் வேறு யாருமல்ல. நானேதான். மாறு வேடத்தில் நாட்டைச் சுற்றிப் பார்த்து வந்து கொண்டிருந்த நான் உன்னைக் காட்டில் சந்தித்தேன். விறகு வெட்டிக் கொண்டே நீ படிப்பில் காட்டிய ஆர்வம் என்னைக் கவர்ந்தது. எனவே நான் உனக்கு ஊக்கம் அளித்துப் புத்தகங்களையும் அனுப்பி வைத்தேன். என் எதிர்பார்ப்பு வீண் போகவில்லை. நீ நன்கு படித்துக் கவிதை புனையும் திறனையும் பெற்று விட்டாய். உன் திறமையை யாவருக்கும் காட்டவே இநதப் போட்டியை ஏற்படுத்தினேன். உன்னைப்போலப் பல கவிஞர்கள் இருப்பதும் இன்று தெரிந்தது. அவர்கள் இன்று பரிசு பெறாவிட்டாலும் அடுத்த முறைகளில் பரிசு பெறக் கூடும். முயன்றால் முடியாதது எதுவும் இல்லை என வாழ்த்திப் பரிசளித்தார்.

சிவனடியான் மன்னர் அளித்த பரிசுகளோடு தன் ஊருக்கு வந்து சுகவாழ்வு வாழ்ந்தான்.





# அரிய சக்தி

மருதாசலம் தான் புதிதாக வாங்கிய வீட்டுக் கொல்லைப்புறத்தில் ஒரு கிணறு வெட்ட நினைத்தான். அதை அறிந்த முருகப்பன் என்பவன் அவனை அணுகி "நீங்கள் கிணறு வெட்டப் போவதாகக் கேள்விப்பட்டேன். நான் பூமிக்கு அடியில் நீரோட்டம் எங்கு உள்ளது என்று அறிந்து சொல்பவன். இது என் குடும்பத்தினர் வம்ச பரம்பரையாகக் கற்ற கலை. எனவே இந்தக் கிணறு வெட்டும் வேலையை என்னிடம் ஒப்படைக்கிறீர்களா?" என்று கேட்டான்.

அப்போது மருதாசலத்தோடு இருந்த அடுத்த வீட்டு அண்ணாசாமியும் "மருதாசலம், நீங்கள் ஊருக்குப் புதியவர். இந்த முருகப்பனைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். அதிக செலவில்லாமலும் விரைவிலும் வேலை முடிந்துவிடும்" என்றான்.

மருதாசலமோ "அண்ணாசாமி பல சமயங்களில் நம் கண்ணெதிரே உள்ள பொருள்களே நமக்குச் சரியாகத் தெரிவதில்லை. இவர் பூமிக்கடியில் உள்ள நீரோட்டத்தைக் கண்டுபிடித்து விடுவாரா? ஏதாவது மாயாஜாலம் மந்திரம் கற்றவரா?" என்று குத்தலாகக் கேட்டான்.

முருகப்பனும் "அதெல்லாம் இல்லை. என் சொந்த அனுபவத்தால் முறைப்படி நீரோட்டம் உள்ள இடத்தைக் கண்டு பிடிக்கிறேன்" என்றான். மருதாசலமோ "இது எல்லோரும் செய்யக் கூடியதே. இதற்கு ஒன்றும் நீண்ட அனுபவம் தேவை இல்லை. நானே கூட நீரோட்டம் கண்டுபிடித்துக் கிணறு வெட்டிக் கொள்கிறேன்" என்றான்.

—கல்பனா சீனிவாசன்—




அதுகேட்டு முருகப்பன் "சரி. உங்கள் இஷ்டம்" என்று பணிவுடன் கூறிவிட்டுச் சென்றான். மறுநாளே மருதாசலம் நான்கு கூலியாட்களை அமர்த்தித் தன் வீட்டுக் கொல்லையில் ஓரிடத்தைக் காட்டி அங்கு கிணறு வெட்டச் சொன்னான். அவர்களும் பத்து நாட்கள் தோண்டியபின் பாறையைத்தான் கண்டார்கள். நீர் ஊற்று சுரக்கவில்லை.

அவர்கள் மருதாசலத்திடம் "இனிமேல் எங்களால் வெட்ட முடியாது. இங்கே நீரோட்டம் இல்லை. இதுவரை நாங்கள் செய்த வேலைக்குக் கூலி கொடுங்கள்" என்றார்கள். மருதாசலமும் அவர்களுக்கு கூலியைக் கொடுத்து அனுப்பினான். பிறகு அவன் அடுத்த வீட்டு அண்ணாசாமியைக் கண்டு மேற்கொண்டு என்ன செய்வது என்று யோசனை கேட்டான்.

அவனும் "நீங்கள் அன்று நான் சொன்னபடி முருகப்பனிடம் இந்த வேலையை ஒப்படைத்திருந்தால் இந்த வீண் செலவைத் தவிர்த்திருக்கலாம். பரவாயில்லை. இப்போதாவது முருகப்பனிடம் இந்த வேலையை ஒப்படைக்கலாம்" என்றான்.

வேறு வழி இல்லாததால் மருதாசலம் முருகப்பனை அழைத்து வரச் சொன்னான். முருகப்பனும் வந்து கொல்லைப் புறத்தில் நாலைந்து தடவை நடந்து பார்த்து முடிவில் ஓரிடத்தைக் காட்டி "இந்த இடத்தில் நீரோட்டம் இருக்கிறது. இங்கு கிணறு வெட்டலாம்" என்று கூறினான். மருதாசலமும் கிணறு வெட்டும் வேலையை முருகப்பனுக்கே கொடுத்து, "நீ நாளையே இந்த வேலையைத் தொடங்கு" என்றான்.

மறுநாளே முருகப்பன் ஆட்களை அழைத்து வந்து தான் குறித்த இடத்தில் கிணறு வெட்டலானான். மூன்று நாட்கள் தோண்டிய பின் நீர் ஊற்று வந்தது. அதன் பிறகு இன்னமும் சற்று வெட்டவே கிணற்றில் நீர் ஏராளமாக வந்து விட்டது. அது

கண்டு மருதாசலமும் மகிழ்ந்து போனான்.

அப்போது முருகப்பன் "நீங்கள் அன்றே என்னிடம் இந்த வேலையை ஒப்படைத்திருக்கலாம். ஆனால் அன்று என் வார்த்தையில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இப்போது பாருங்கள் நான் எதிர்பார்த்ததை விட நன்றாக ஊற்று எடுத்திருக்கிறது" என்றான்.

மருதாசலமும் "சரி. உனக்கு நான் எவ்வளவு கொடுக்க வேண்டும்?" என்று கேட்கவே அவனும் "எல்லாம் சேர்ந்து ஐநூறு ரூபாய்" என்றான். அதுகேட்டு மருதாசலம் முகத்தைச் சுளித்தவாறே "மூன்று நாட்கள்தானே வேலை செய்தாய்? அதற்கா ஐநூறு ரூபாய்?" என்று கேட்டான்.

முருகப்பனும் "இதில் நூறு ரூபாய் கூலியாட்களுக்கு. மீதம் நானூறு ரூபாய் நீரோட்டம் எங்குள்ளது என்று கண்டுபிடித்த எனக்கு. இதில் மந்திரமோ மாயமோ எதுவும் இல்லை. இதை நீங்களே பார்த்தீர்களே" என்றான். மருதாசலமும் அவன் கேட்ட பணத்தைக் கொடுத்தான்.

அப்போது அங்கு வந்த அண்ணாசாமி "இது சின்ன இடமானதால் சட்டென நீரோட்டம் எங்கே என முருகப்பனால் கண்டு பிடிக்க முடிந்தது. இதுவே தோட்டம், வயக்காடு என்றால் முருகப்பனுக்கு எவ்வளவு சிரமம்? அவன் செய்கையில் மந்திரம் மாயம் இருப்பதாக நீங்கள் நினைத்ததே ஒரு மூடநம்பிக்கை. அவன் தன் பழுத்த அனுபவத்தால் நிலத்தில் நடந்து நீரோட்டம் உள்ள இடத்தை உணர்கிறான். அது உங்களாலும் முடியாது. என்னாலும் முடியாது. இதுதான் அவன் பெற்ற அரிய சக்தி" என்றான்.

மருதாசலமும் 'ஆம்' என்பது போலத் தலையை ஆட்டினான்.






இராமர் ஆண்டபோது வடக்கு எல்லையில் கந்தர்வர்களின் அட்ட காசம் அதிகமாகி மக்கள் பல தொல்லைகளுக்கு ஆளாயினர். அதன்பின் வடமேற்கு எல்லையில் லவணாசுரன் என்ற அரக்கன் மக்களைத் துன்புறுத்தி வந்தான். இராமர் அவனை அடக்க சத்ருக்கனனை அனுப்பினார். சத்துருக்கனனுக்குத் துணையாக விபீஷணனும் சென்றான். விபீஷ்ணனை அனுமார்தான் இதற்காக அழைத்து வந்தார்.

சத்துருக்கனன் விபீஷணனுடனும் அவனது ராட்சஸப் படைகளோடு போய் லவணாசுரனை எதிர்த்துப் போரிட்டான். கடும் போர் நிகழ்ந்தது. முடிவில் லவணாசுரன் சத்துருக்கனனின் கையால் மடிந்தான். வெற்றிவாகை சூடி சத்துருக்கனன் விபீஷணனுடன் அயோத்திக்குத் திரும்பி வந்தான்.

ஒருநாள் இராமர் சீதையுடன் அவையில் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தார். இராமரின் முன் அனுமாரும், இரு பக்கங்களிலும் இலட்சுமணன், பரதன், சத்துருக்கனன் ஆகியோரும் இருந்தனர். சபையில் விபீஷணன், சுக்கிரீவன், அங்கதன், நலன், நீலன், ஜாம்பவான் முதலானோர் கூடி இருந்தனர். வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி போன்ற முனிவர்கள் தம் ஆசனங்களில் அமர்ந்து அவையை



அலங்கரித்தனர்.

அச்சமயத்தில் அந்த அவைக்குள் அகத்திய முனிவர் விஜயம் செய்தார். இராமர் அவரை வணங்கி வரவேற்றுத் தக்க மரியாதைகளைச் செய்து ஆசனத்தில் அமர்த்தினார். பின்னர் இராமர் அவரது நலன் விசாரித்தார்.

அகத்தியரும் "இராமா! நீ இருக்கையில் எங்களுக்கு என்ன கவலை? துஷ்டர்களை ஒழித்து தூயவர்களின் துயர் துடைப்பவன் நீ. தசகண்ட இராவணனைக் கொன்று புகழ் பெற்றாய். இப்போது திக்த சமுத்திரத்திற்கு அப்பாலுள்ள மாயா நகரத்தில் சதகண்டன் என்ற கொடிய அரக்கன் இருக்கிறான். அவனை நீ ஒழிக்க வேண்டும்" என்றார்.

அதைக் கேட்ட இராமர் ஆச்சரியப்பட்டு "இந்த சதகண்டன் யார்? இவனைப் பற்றி சற்று விவரமாகக் கூறுங்கள்" என்று வேண்டவே, அகஸ்தியரும் சொல்லலானார்.

"கஸ்யப முனிவரின் மனைவி விவசு. அவள் அசுர சந்தியா வேளையின் போது கர்ப்பமுற்று மிகவும் அவலட்சணமான சதகண்டனைப் பெற்றெடுத்தாள். அவன் பிரம்ம தேவனைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தான். பிரம்மாவும் அவன் முன் தோன்றி என்ன வரம் வேண்டும் என்று கேட்கவே அவனும் தனக்கு தேவர்களை எல்லாம் வெல்லக்கூடிய சக்தியை அளிக்குமாறு வரம் கோரினான். பிரம்மாவும் அவன் கேட்ட வரங்களை அளிக்கவே அவன் மூவுலகையும் தன் வசமாக்கிக் கொள்ள நினைத்துக் கொண்டிருக்கிறான். இப்படிப்பட்ட கொடியவனை நீதான் கொல்ல வேண்டும். அதனால் மூவுலகமும் க்ஷேமமாக இருக்கும்" என்றார்.

இராமரும் புன்னகை புரிந்தவாறே அகஸ்தியரை வணங்கினார். அவரும் இராமருக்கு ஆசிகள் கூறி அங்கிருந்து சென்றார். அப்போது இராமர் தன் சகோதரர்களிடம் "இந்த சதகண்டனை

ஒழிக்க யாரை அனுப்பலாம்? அவன் பல கடல்களுக்கு அப்பால் எங்கோ இருக்கிறானாம். இது எளிதான வேலை அல்லவே'' எனக் கூறி யோசிக்கலானார்.

அவர் சுற்றிலும் பார்த்தபோது அவர் பார்வையில் முதலில் தென் பட்டவர் அனுமார்தான். அவர் உடனே "அனுமாரே! இந்த வேலை உம்மால்தான் முடியும். நீர்தாம் சிவபிரானின் அம்சம் ஆயிற்றே'' என்றார். அனுமாரும் "உங்களால் இந்த ராட்சஸனை எளிதில் ஒழித்து விட முடியுமே. நான் உங்களை எல்லாம் என் முதுகின் மீது ஏற்றிக் கொண்டு கடல்களைக் கடந்து செல்கிறேன் நீங்கள் அவனைக் கொன்று உல கைக் காப்பாற்றுங்கள்'' என்றார்.

இராமர் அனுமாரைப் பாராட் டியவாறே "அனுமாரே! உமது சக்தி வேறு யாருக்கு இருக்கிறது?'' என்று கூறினார். இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சீதை "அனுமார் சிவபெருமானின் அம் சம் என்றீர்களே. இதுபற்றி விவர மாகக் கூறுங்கள்'' என்று வேண் டினாள். இராமரும் சொல்லலா னார்.

"சிவபிரானை ருத்திர கணங் கள் துதி செய்து கொண்டிருக் கையில் அவர் தன் தியான சக்தி யால் மகாவிஷ்ணுவின் உருவத் தைக் கண்டார். அவர் காக்கும்



பொறுப்பை ஏற்றுள்ளவர் என வும் கண்டு கொண்டார். அவர் அவதரிக்கும் போது உறுதுணை யாக இருக்க வேண்டும் என எண்ணி சிவபிரான் தன் அம் சத்தை அனுமாரின் உடலில் செலுத்தினார்'' என்று கூறினார்.

சீதைக்கு இவ்வாறு விளக்கிய பின் இராமர் சதகண்டனின் மீது படை எடுத்துச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யலானார். அவருடன் தானும் வருவதாக சீதை கூறவே அவரும் அனுமதி அளித்தார். இலட்சுமணன், பர தன், சத்துருக்கனன், சுக்கிரீவன், விபீஷணன் முதலியோரும் படை களுடன் கிளம்பத் தயாராயினர்.



அப்போது இராமர அனுமாரைப் பார்த்தார். அவரோ விஸ்வரூபம் எடுத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார். அதன் ஆரம்பம் எது, முடிவு எது என்று யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. அதைக் கண்டு யாவரும் திகைத்துப் போனார்கள்.

அப்போது அனுமார் "நான் குனிந்து கொள்கிறேன். என் முதுகில் எல்லோரும் ஏறிக் கொள்ளுங்கள்" என்றார். அதுகேட்டு இராமர் சீதையின் கையைப் பற்றிக் கொண்டு அனுமாரின் முதுகின் மீது ஏறியவுடன் தொடர்ந்து அவரோடு செல்ல விரும்பியவர்கள் எல்லாம் அனுமாரின் முதுகில் ஏறிக் கொண்டனர். அவர்கள் எல்லோரும் கொஞ்சமும் சிரமப் படாமல் ஏதோ தொட்டிலில் படுத்து ஆடுவது போல ஆகாய வழியாகப் போய்க் கொண்டிருந் தார். அனுமாரோ ஆகாயத்தில் மேருமலையே கிளம்பிச் செல்வது போலத் தென்பட்டார்.

அனுமார் ஏழு கடல்களைக் கடந்து சென்று கொண்டிருந்த போது இராமர் ஒவ்வொரு கடலையும் சீதைக்குக் காட்டி அதுபற்றிக் கூறி வந்தார். முடிவில் சதகண்டன் வாழும் மாயா நகரம் தென் பட்டது. அது தங்க மயமாக ஒளி விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அனுமார் என்னவோ ஏழு கடல்களைத் தாண்டி வந்து விட்டார். ஆனால் அந்த மாயா நகரத்தின் பலமான கோட்டைக்குள் புகுவது அவ்வளவு எளிதல்லவே.

மாயா நகரம் ஒரு தீவில் உள்ளது. அதைச் சுற்றி அடர்ந்த காடு இருந்தது. அனுமார் எல்லோரையும் அந்தக் காட்டில் ஒரு ஓரமாக இறக்கி விட்டார். இராமர் சுக்கிரீவனிடம் "இனி நம் படைகளைக் கொண்டு மாயா நகரின் மதில் சுவரை தகர்த்து உள்ளே நுழைய வேண்டும்" என்றார். சுக்கிரீவனின் கட்டளைப்படி வானரர்கள் மாயா நகரக் கோட்டையைச் சுற்றி இருந்த அகழியைத் தூர்த்து



விட்டு மதில் சுவரை ஒரே சமயத்தில் பல பகுதிகளில் இடிக்கலானார்கள்.

அக்கோட்டையைப் பாதுகாத்து வந்த காலகேயர்கள் திடீரெனக் குரங்குகளும் ராட்சஸர்களும் சேர்ந்து மதில் சுவரை உடைப்பது கண்டு ஆச்சரியப்பட்டனர். "இந்த நகர் சதகண்டரின் ஆதிக்கத்தில் உள்ளது என்று உங்களுக்குத் தெரியாதா?" என கர்ஜித்தவாறே அவர்கள் வானரர்களை நோக்கி ஓடினார்கள்.

காலகேயர்களின் தாக்குதலை சமாளிக்க முடியாமல் வானரங்கள் சிதறி ஓடின. ஆனால் ராட்சஸப் படைகள் காலகேயர்களைக் கடுமையாகத் தாக்கவே போர் பயங்கரமாக நடக்கலாயிற்று. அப்போது சிவபூஜை செய்து கொண்டிருந்த சதகண்டன் கோட்டைக்கு வெளியே இருந்து வரும் சத்தம் கேட்டு "இது என்ன இரைச்சல்?" என்று காவலாளியிடம் கேட்டான்.

காவலாளிகளும் அவனை வணங்கி "யாரோ மன்னனாம்! குரங்குகளோடும் ராட்சஸர்களோடும் வந்து நம் கோட்டையைத் தாக்குகிறான். அந்தப் படைகளை நம் காலகேயர்கள் எதிர்த்துப் போரிட்டுக் கொண்டிருக்கிறார்கள்" என்றனர்.

அதுகேட்டு சதகண்டன் "யாரோ மன்னன் குரங்குகளோடு வந்து நம்மைத் தாக்குகிறான் என்றால் இதைக் கேட்டு யார்தான் சிரிக்க மாட்டார்கள்? என்னைக் கண்டு தேவர்களே நடுங்கும்போது இந்த மன்னன் மட்டும் என்ன துணிச்சலோடு என்மீது படை எடுக்கிறான்?" என யோசித்தவாறே தன் மந்திரிகளை அழைத்து வரச் சொன்னான்.

அவன் எல்லோரையும் போர் புரியக் கிளம்பச் சொல்லிவிட்டுத் தானும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு கிளம்பினான். அவனைக் கண்ட இராமர் அவனது கம்பீரத் தோற்றத்தைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார். அதுகண்டு அனுமார் "இவனைக் கண்டு ஏன் ஆச்சரி

யப்படுகிறீர்கள்? உங்கள் முன்னால் இவன் எம்மாத்திரம்? இவனை அடித்து வீழ்த்துங்கள்'' என்று கூறியவாறே சதகண்டனை நோக்கிப் பாய்ந்தார். சதகண்டனின் அகண்ட மார்பின் மீது அவர் ஓங்கி ஒரு குத்துக் குத்தினார். அந்த ஒரு குத்தைத் தாங்க முடியாமல் அவன் துவண்டு கீழே விழுந்தான்.

ஆனால் மறுவினாடியே அவன் சமாளித்துக் கொண்டு எழுந்து அனுமாரைப் பார்த்து "அடேயப்பா! உனக்கும் நிறைய பலம்தான் இருக்கிறது! என்னையே அடித்து விழ வைத்து விட்டாயே. ஆனால் இதோ பார். இந்த சூலத்திற்கு என்ன பதில்?'' என்று கூறி ஒரு சூலத்தை எடுத்து அனுமாரின் மீது எறிந்தான். அதை அனுமார் பிடித்து ஒடித்து எறிந்தார்.

"ஆ! அப்படியா!'' எனக் கருவியவாறே பலவகை ஆயுதங்களை எடுத்து அவன் அனுமார் மீது எறிந்து பார்த்தான். அவற்றை எல்லாம் அனுமார் பிடித்து ஒடித்து எறிந்தார். அப்போது இராமர் வில் அம்புகளுடன் சதகண்டனை எதிர்க்கச் சென்றார். சதகண்டன் அவர்களை அம்புகளால் கட்டி ஒரு தீவில் போய் விழச் செய்தான்.

ஆனால் அனுமார் தன் வாலை நீட்டி அவர்களை விழாமல் தடுத்து இராமரையும் விபீஷணனையும்



அதன்மீது உட்கார வைத்து இழுத்து வந்தார். அவர்கள் இருவரும் சதகண்டனுடன் போர் புரியலானார்கள். சதகண்டனின் மீது வானரர்கள் கற்களால் தாக்கினார்கள். அவற்றை எல்லாம் சதகண்டன் தவிடு பொடியாக்கினான். அவனது தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் அங்கதன், நலன், நீலன் ஆகியோர் பயந்து ஓடினார்கள்.

அப்போது இராமர் சீதையுடன் அனுமாரின் தோளின் மீது ஏறிக்கொண்டு சதகண்டனை எதிர்க்க வந்தார். அப்போது சதகண்டன் "என்னையும் இராவணன் என்று எண்ணிவிடாதே. நீ போர் புரியத் தானே வந்தாய்? உன் மனைவியை

யும் ஏன் அழைத்து வந்தாய்?'' என்று கேட்டான். இராமர் அவனை அம்பால் அடிக்கவே அங்கு பல ஆயிரம் சதகண்டர்கள் நிற்பதைக் கண்டார்.

அனுமார் ஆத்திரம் கொண்டு சதகண்டனைத் தாக்கலானார். இராமர் வில்லையும் அம்புகளை யும் சீதையிடம் கொடுத்தார். சீதை சதகண்டன் மீது அம்புகளை எய்ய அவற்றை எல்லாம் அவன் எதிர்த்துப் பயனற்றுப் போகும் படிச் செய்தான். அப்போது சீதை இராமரை மனதில் தியானித்துக் கொண்டு ஒரு அம்பை எய்தாள். மறுநிமிடமே சதகண்டன் 'ஆ'வென அலறிக் கீழே விழுந்து இறந்தான்.

இராமர் அதுகண்டு மகிழ்ந்து தன் மணியாரத்தை எடுத்துச் சீதைக் குப் பரிசாக அளித்தார். சீதையோ ''நமக்கு இப்போரில் பெரிதும் உதவிய அனுமாருக்கே இதனைக் கொடுங்கள்'' என்றாள். இராம ரும் அதனை அனுமாருக்குக் கொடுக் கவே அவர் அதைப் பெருமையுடன் அணிந்து கொண்டு ''இது என் மார்பில் பட எப்போதும் இராம ரும் சீதையும் என் மனதிலிருந்து அகலாமல் இருப்பார்கள்'' என் றார்.

எல்லோரும் அயோத்திக்குத் திரும்பினார்கள். விபீஷணன் இரா மரிடம் விடைபெற்றுக் கொண்டு இலங்கைக்குச் சென்றான். அது போல சுக்கிரீவனும் கிஷ்கிந்தைக் குச் சென்றான். அனுமார் அயோத் திலேயே இருந்து விட்டார்.

இராமருக்குப் பணிபுரிந்து வந்த அனுமார் மனதில் தன் தாயான அஞ்சனாதேவியை காணவேண் டும் என்ற ஆசை எழுந்தது. அத னால் அவர் இராமரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு கந்தமாதன பர்வதத்திற்குச் சென்றார். அங்கு தான் அஞ்சனாதேவியின் ஆசிர மம் இருந்தது.





# இட்டார் பெரியோர்

ஒருநாள் நாரதர் பூலோக சஞ் சாரத்தை முடித்துக்கொண்டு வைகுண்டலோகம் சென்றார். அவரைக் கண்ட மகாவிஷ்ணு "நாரதா! பூலோகம் போய் வந் தாயே. அங்கு மக்கள் சுகமாயும் திருப்தியுடனும் இருக்கிறார்களா? நிறையச் செல்வம் படைத்தவர் கள் தான தர்மங்களைச் செய்கி றார்களா?" என்று கேட்டார்.

அதுகேட்டு நாரதர் சிரித்து "தேவா! தங்கள் கேள்விக்கு என் னால் சட்டென பதில் கூறமுடிய வில்லை. தாங்கள் ஒரு தடவை பூலோகம் சென்று பார்த்தால் உண்மை நிலை தெரியும்" என் றார்.

விஷ்ணுவும் "சரி, நாம் இருவ ரும் சேர்ந்தே போவோம்" என் றார். இருவரும் வழிப்போக்கர் கள் போல உருமாறி ஒரு சிறிய ஊருக்குள் சென்றார்கள்.

அங்கே ஒரு பெரிய மாளிகை யின் முன் நின்று அவர்கள் பார்த் தார்கள். அதன் வாசல் கதவு மூடித் தாளிடப்பட்டிருந்தது. அவர்கள் கதவைத் தட்டிக் குரல் கொடுத்துப் பார்த்தார்கள். ஆனால் எவ்வித பதிலும் கிடைக்க வில்லை. எனவே அவர்கள் வேறு ஒரு வீட்டிற்குச் சென்றார்கள்.

அந்த வீட்டின் கதவு திறந் திருந்ததால் அவர்கள் வீட்டிற்குள் சென்றார்கள். அவர்கள் தாம் வழிப் போக்கர்கள் என்றும் உண்ண ஏதாவது உணவு கொடுக்கும்படி அந்த வீட்டுக்காரனிடம் கேட் டார்கள். வீட்டுக்காரனோ அவர் களை வெளியே போகச் சொல் லிக் கதவைப் படாரென்று மூடித் தாளிட்டான்.

அவர்கள் இன்னும் சில வீடு

—சிந்து சங்கர்—



களுக்குப் போய் பார்த்தார்கள். ஒரு சிலர் ஒன்றும் இல்லை என்று விரட்டினார்கள். வேறு சிலர் ஏதாவது வேலை செய்து சம்பாதித்துச் சாப்பிடுவதுதானே என்று அறிவுரை கூறினார்கள். முடிவில் அவர்கள் ஊருக்கு ஒதுக்குப்புறமாக உள்ள ஒரு குடிசைக்குச் சென்றார்கள்.

அவர்கள் 'ஐயா' என்று கூப்பிடவே குடிசைக்குள்ளிருந்து ஒரு கிழவன் வெளியே வந்தான். அவன் சிரித்தவாறே "உள்ளே வாருங்கள். யாரோ வழிப்போக்கர்கள் போலத் தெரிகிறது. நாங்கள் ஏழைகளானாலும் வீட்டிற்கு வந்தவர்களை எங்களது சக்திக்கு ஏற்றபடி உபசரிக்கத் தயங்கமாட்டோம்" என்றுகூறி உள்ளே அழைத்துச் சென்றார்கள்.

புதிதாக விருந்தாளிகள் வருவது கண்டு குடிசைக்குள் இருந்த கிழவி ஒரு கிழிந்த பாயை எடுத்துப் போட்டு அவர்களை உட்காரச் சொன்னாள். கிழவனும் "நீங்கள் சற்று இளைப்பாறுங்கள். அதற்குள் என் மனைவி சமையல் செய்துவிடுவாள்" என்றான். அவர்கள் பாயில் உட்கார்ந்ததும் கிழவன் "முதலில் கொஞ்சம் பழமும் பாலும் சாப்பிடுங்கள். கொண்டு வருகிறேன்" என்றுகூறி குடிசைக்குப் பின்புறம் போய் ஒரு வெள்ளரிப் பழத்தைப் பறித்து எடுத்து வந்தான்.

அவன் வெள்ளரிப் பழத்தை நறுக்கி இரு துண்டுகளாக்கி ஒன்றை விஷ்ணுவிடமும் மற்றதை நாரதரிடமும் கொடுத்தான். பிறகு இரு சிறு கலயங்களில் பாலையும் கொண்டு வைத்து "முதலில் இதைச் சாப்பிடுங்கள். சற்று நேரத்தில் சாப்பாடு தயாராகிவிடும். பிறகு அதைச் சாப்பிடலாம்" என்றான்.

கிழவனும் கிழவியும் ஏழைகளான போதிலும் வீட்டுக்கு வந்தவர்களை உபசரிக்கும் விதம் கண்டு விஷ்ணு மகிழ்ந்து போனார்.

விஷ்ணு தன் கலயத்துப்

பாலைக் குடித்துவிட்டுக் கீழே வைத்தார். அப்போது அதில் பால் நிறைந்து வழிந்தது. நாரதர் தனது வெள்ளரிப் பழத் துண்டைக் கொஞ்சம் கடித்துச் சாப்பிட்டுவிட்டுக் கீழே வைத்தார். அது முழுப் பழமாக ஆகிவிட்டது. இந்த அதிசயத்தைக் கண்ட கிழவன் ஆச்சரியப் பட்டு வந்திருப்பவர்கள் யாரோ மகாபுருஷர்கள் எனத் தெரிந்து கொண்டான்.

அவன் தன் மனைவியிடம் வந்திருப்பவர்கள் மகா புருஷர்கள் எனக்கூறி தான் கண்ட அதிசயத்தைக் கூறினான். அவளும் ஆச்சரியப்பட்டவாறே தன் கணவனுடன் விருந்தாளிகள் உட்கார்ந்திருந்த இடத்திற்கு வந்தாள். இருவரும் அவர்களை வணங்கி "மகான்களே! நீங்கள் யார் என்பதைப் போதிய ஞானம் இல்லாத எங்களால் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் நீங்கள் சாமான்னிய மனிதர்களல்ல என்பது மட்டும் புரிகிறது. எங்கள் வீடு உங்கள் காலடிபட்டதால் புனிதமாகியது. எங்கள் அறியாமையால் நாங்கள் உங்களுக்கு ஏதாவது தவறு செய்திருந்தால் எங்களை மன்னியுங்கள்" என்றார்கள்.

அதைக்கேட்ட விஷ்ணு "ஒரு குறையும் இல்லை. எங்களை மிக



மிக நன்றாக உபசரித்தீர்கள். யாருடைய உதவியும் இல்லாமல் பணமும் இல்லாமல் வந்த விருந்தாளிகளை உபசரிப்பது கண்டு எங்கள் மனம் பூரிக்கிறது. நீங்கள் இருவரும் என்னோடு சற்று வெளியே வாருங்கள்" என்றார்.

அவர்களும் விஷ்ணுவுடனும் நாரதருடன் வெளியே வந்தார்கள். அவர்கள் வெளியே கண்ட காட்சியைக் கண்டு திகைத்துப் போனார்கள். ஏனெனில் எதிரே இருந்த மாளிகைகள், வீடுகள் எதுவும் இல்லாமல் ஒரு மைதானமாக இருந்தது.

கிழவன் அவர்களைப் பார்த்து "மகான்களே! இதென்ன கொ

டுமை! இங்கிருந்த வீடுகள் எல்லாம் என்ன ஆயின?'' என்று கேட்டான். அதற்கு விஷ்ணு ''அவை எல்லாம் நிலத்தின் கீழே அமிழ்ந்து விட்டன. பசி என்று வருபவர்களுக்கும், வழிப்போக்கர்களுக்கும் தம் வீட்டில் இடமளிக்காமலும், உணவளிக்காமலும் விரட்டும் அவர்கள் இருப்பதும் ஒன்றுதான், இல்லாதிருப்பதும் ஒன்றுதான். அதுபோகட்டும் உங்களுக்கு என்ன வேண்டுமோ கேளுங்கள் கொடுக்கிறோம்'' என்றார்.

கிழவனும் ''எங்களுக்கு என்னவோ வயதாகிவிட்டது. நாங்கள் கோருவது ஒன்றேதான். எங்கள் இருவருக்கும் ஒரே சமயத்தில் மரணம் ஏற்பட வேண்டும். அதுவரை கடவுளை வழிபட இங்கு ஒரு கோவில் இருந்தால் நல்லது என்று நினைக்கிறோம். இதுதான் எங்கள் ஆசை'' என்றான்.

மறுவிநாடியில் அந்த மைதானத்தில் ஒரு அழகிய கோவில் தென்பட்டது. கிழவனின் குடிசையும் அழகியவீடாக மாறியது. அப்போது விஷ்ணு அக்கிழவனையும் ஆசீர்வதித்து ''நீங்கள்தாம் உண்மையான மனிதர்கள். நீங்கள் உங்கள் வாழ்நாள் முழுவதும் சுகமாக வாழ்ந்துவிட்டு அது முடிந்த பின் அந்தக் கோவிலின் முன் இரண்டு ஆலமரங்களாக நீண்ட காலத்திற்கு இருந்து கொண்டிருப்பீர்கள்'' என்று ஆசீர்வதித்து விட்டு நாரதருடன் மறைந்து போனார்.

அக்கிழத் தம்பதிகளும் தமக்குக் கிடைத்த செல்வத்தை தானதர்மங்களில் செலவிட்டு அக்கோவிலில் குடி கொண்டிருந்த தெய்வத்தை பூஜை செய்து கொண்டு பல ஆண்டுகள் வாழ்ந்தனர். அவர்கள் இறந்தபின் இரு ஆலமரங்களாகி அக்கோவிலின் முன் நின்று யாவருக்கும் பயன்பட்டார்கள். மக்கள் பெருந்திரளாக அக்கோவிலுக்கு வந்து அக்கிழத் தம்பதிகளின் புகழ்பாடி மரியாதை செய்தனர்.





# அம்புலிமாமா செய்திகள்

## பிராணிகள் காட்சியில் 'மனிதன்

பிராணிகள் கண்காட்சியில் மிருகங் களையும் பறவைகளையும் ஊர்வன போன்ற உயிரினங்களையும் மட்டுமே காண முடியும். ஆனால் பெல்கிரேடில் கடந்த ஒரு கண்காட்சியில் மனிதனையும் ஒரு உயிரினமாக மற்ற பிராணிகளோடு சேர்த்து வைத்தார்களாம், இதற்காக காலை 8 மணி முதல் இரவு 8 மணிவரை ஒரு கூண்டில் எல்லா வசதிகளோடும் ளோடும் இருக்க ஒரு மனிதன் தேவை என விளம்பரப் படுத்தினார்கள். அதற்காக எராளமான மனுக்கள் வந்து குவிந்தன. இவற்றுள் முதலாவதாக வந்த மனு ஒரு கம்ப் யூட்டர் நிபுணரிடமிருந்துதான்.




## பின்னால் நடப்பதில் சாதனை

கோஷவயைச் சேர்ந்த சந்திரன் என்ற இளைஞர் அவ்வூர் நேரு ஸ்டேடியத்தைக் காலையிலிருந்து மாலை வரை சுற்றிச் சுற்றி பின்னால் நடந்து 81 கிமீ. தூரத்தைக் கடந்து சாதனை புரிந்திருக்கிறார். 12 மணி நேரத்தில் 76 தடவைகள் ஸ்டேடியத்தைச் சுற்றி இருக்கிறார். இதுபோல சென்னையிலும் டில்லியிலும் செய்து காட்டப் போகிறாராம். கராத்தேயில் 'கருப்பு பெல்ட்' அடைந்த சந்திரன் தினமும் 10 கி.மீ. ஓடுகிறார். வாரத்திற்கு ஒரு முறை 5 கி.மீ. பின்னால் நடக்கிறார். கேரளத்தைச் சேர்ந்த இவர் இப்போது கோவையில் வசிக்கிறார்.

## முதல் திருட்டு

பசுபிக் மாக்கடலிலுள்ள குக் தீவில் இதுவரை ஒரு திருட்டுக்கூட நடக்கவில்லை எனப் போலீஸ் ரிகார்டு கூறுகிறது. ஆனால் சென்ற ஜூலையில் ஒருவன் ஒரு ஹோட்டல் கதவை உடைத்து உள்ளே நுழைந்து 24,750 அமெரிக்க டாலர் மதிப்புள்ள நியுஜிலாந்து கரன்ஸி நோட்டுகளைத் திருடும்போது பிடிபட்டான். இதுதான் அத்தீவில் நடந்த முதல் திருட்டு.

## லிதுானியா உதாரணம்

லிதுானிய அமைச்சர்கள் புகை பிடிக்கக் கூடாது எனத் தீர்மானித்து மக்களுக்கு வழிகாட்டியாக விளங்குகிறார்கள்.




நரியூரில் இருந்த கோமதி ஊதாரித் தனமாக செலவு செய்பவள். அவள் தன் கணவன் கிருஷ்ணனின் பேச்சை அவ்வளவாகக் கேட்பதும் இல்லை. அவனுக்குத் தெரியாமலேயே சில வேலைகளைச் செய்வாள். அவளுடைய மகள் பத்மா. அவளுக்கு மோகன் என்பவனைக் கல்யாணம் செய்து வைத்தார்கள்.

கோமதி தன் மகளைக் கணவன் வீட்டிற்கு அனுப்புவதற்கு முன் அவளிடம் "இதோ பார்! அசட்டுப்பிசட்டென்று ஒவ்வொன்றையும் உன் கணவனிடம் சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. அப்படிச் சொன்னால் அவன் நீ செய்ய விரும்புவதைச் செய்யாதே என்றுதான் கூறுவான். இது ஆண்களின்சுபாவம். அதனால் பல வேலைகளைக் கணவனிடம் சொல்லாமலே செய்து கொள்ள வேண்டும். தெரிந்ததா? என்று அறிவுரை கூறினாள்.

அப்போது பத்மாவின் கணவன் மோகன் அங்கு வரவே கோமதி "நீங்கள் வாழும் பட்டணத்தில் உயர்தர அத்தர் கிடைக்கிறது. நீங்கள் அடுத்த தடவை வரும்போது எனக்கு வாங்கி வாருங்கள்" என்றாள்.

பத்மா பட்டணத்திற்கு வந்து தனிக்குடித்தனம் செய்ய ஆரம்பித்ததும் தன் தாயைப்போலவே கண்ட கண்ட பொருள்களை எல்லாம் வாங்கிக் குவிக்கலானாள். புடவைகள், பாத்திரங்கள், திரைச்சீலைகள் என்று கணக்கில்லாமல் வாங்கிப் போட்டுக் கொண்டே இருந்தாள். இதெல்லாம் வீண். நமக்குக் கொஞ்சமும் உபயோகமில்லையே என்று மோகன்

—குடந்தை கிரிஜா—

அவ்வப்போது சொல்லியும் பார்த்தான். பத்மாவோ "நான் என் அம்மாவைப்போலத்தான் எனக்கு இஷ்டமானதை வாங்கத்தான் வாங்குவேன்" என்று பட்டெனக் கூறலானாள்.

தீபாவளி நெருங்கியது. மோகனுக்கு மாமனார் வீட்டிலிருந்து அழைப்பு வரவே பத்மா "என் அம்மா அத்தர் வாங்கி வரச் சொன்னாளே, இன்று சாயந்திரம் வாங்கி வந்துவிடுங்கள். நாளை எங்கள் ஊருக்குக் கிளம்ப வேண்டும்" என்றாள்.

ஆனால் அன்று மாலையாகி பத்து மணிக்குத்தான் தள்ளாடிக் கொண்டே வந்து மோகன் ஒரு நாற்காலியில் பொத்தென்று விழுந்தான்.

அது கண்டு பத்மா "என்ன இது? ஏன் இப்படி இருக்கிறீர்கள்? என்று கேட்டாள். மோகனும் "அதை ஏன் கேட்கிறாய் போ! நான் அத்தருக்காகக் கடைக் கடையாக ஏறிப் பார்த்தேன். இப்போதெல்லாம் சிறிய பாட்டில்களில் அத்தர் வருவது இல்லையாம். வழியில் ஒருவன் சிறிய பெட்டியில் சிறு பாட்டில்களை வைத்துக் கொண்டு அத்தர், ஜவ்வாது என்று கூவிக் கொண்டிருந்தான். அவனிடம்போய் அத்தர் கேட்டேன். அவன் ஒரு சிறிய பாட்டிலை என்னிடம் கொடுத்து



முகர்ந்து பார்க்கச் சொன்னான். அவ்வளவுதான்! நான் மறு நிமிடமே என் நினைவை இழந்து விழுந்துவிட்டேன். நான் கண் விழித்துப் பார்த்தபோது அந்த வியாபாரியையும் காணோம். தீபாவளிச் செலவுக்காக என் சட்டை பையில் வைத்திருந்த ஆயிரம் ரூபாயையும் காணோம். உன் அம்மாவுக்கு அத்தர் வாங்கப் போய் என் பணம் பறிபோய் விட்டது. அந்தப் பணத்தை உன் அம்மாவிடமிருந்துதான் வசூல் செய்ய வேண்டும். அந்தப் பணத்தை உன் அம்மா கொடுக்காவிட்டால் உன்னைவிட்டுவிட்டு நான் மாத்திரம் இங்கு வந்துவிடுவேன்."



எனக்குத் தெரியாது இன்னும் இரண்டு நாட்களுக்குள் அவருக்கு ஆயிரம் ரூபாயைக் கொடுத்துவிட வேண்டும் தெரிந்ததா?'' என்றாள்.

கோமதி சற்று யோசித்து பத்மாவிடம் தன் திட்டத்தைச் சொன்னாள். கிருஷ்ணன் தன்னோடு எப்போதும் பணம் வைக்கும் பெட்டியின் சாவியை வைத்துக் கொண்டே இருப்பான். அந்தப் பணப்பெட்டி மீது கனமான பாத்திரப் பெட்டி ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அதனை கோமதியும் பத்மாவும் சேர்ந்தால்கூட கீழே இறக்கி வைக்க முடியாது. யாராவது ஒரு ஆணால்தான் முடியும்.

இரவில் கிருஷ்ணன் பெட்டிச் சாவியைத் தன் தலையணைக்கு அடியில் வைத்துக் கொண்டு தூங்குவதுதான் வழக்கம். இரவில் அவன் நன்கு தூங்கும்போது தலையணையின் அடியிலிருந்து சாவியை எடுத்துப்போய் பணப்பெட்டியை திறந்து அதிலிருந்து ஆயிரம் ரூபாயை மோகனைக் கொண்டு எடுக்கச் செய்வதுதான் கோமதியின் திட்டம்.

பத்மாவும் கோமதியும் விஷயத்தை மோகனிடம் விளக்க அவனோ தன்னால் அந்தத் திருட்டைச் செய்ய முடியாது என்று கூறினான். அப்போது கோமதி ''மாப்பிள்ளை! நம் வீட்டுப் பணத்தை

என்றான்.

அதுகேட்டு பத்மா பயந்து போனாள். அதற்கு முன் மோகன் அவ்வளவு கோபமாகப் பேசி அவள் கேட்டதே இல்லை. மறுநாள் குதிரை வண்டியில் அவர்கள் நரியூருக்குப்போய் இறங்கினார்கள். அப்போது பத்மா உள்ளேபோய்த் தன் தாயாரைக் கொல்லைப்புறத்திற்கு அழைத்துப் போனாள்.

அவள் தன் தாயாரிடம் ''உன் அத்தரால் என் வாழ்க்கையே பாழாகிவிடும் போலிருக்கிறது. என்று கூறித் தன் கணவனுக்கு நேர்ந்ததைக் கூறினாள். முடிவில் அவள் ''நீ என்ன செய்வாயோ

நாமே எடுத்துக் கொள்வது திருட்டு அல்ல. நீங்கள தொலைத்த பணத்தைத்தான் திரும்பப் பெறு கிறீர்கள்'' எனவே மோகனும் "ஆமாம் சரிதான்'' என்று கூறி அவர்கள் சொல்கிறபடி செய்ய இசைந்தான்.

கோமதியின் திட்டப்படியே எல் லாம் நடந்தது. விடிந்தால் தீபா வளிப் பண்டிகை. அச்சமயத் தில் நகைகளை அணிந்து கொள்ள வேண்டும் என்று கோமதி தன் கணவனிடம் கூறி அவற்றைப் பணப் பெட்டியிலிருந்த எடுத்துக் கொடுக்கும்படி கேட்டாள்.

கிருஷ்ணனும் பாத்திரப் பெட் டியை இறக்கிக் கீழே வைத்து விட்டு பணப்பெட்டியைத் திறந் தான். உள்ளே நகைப் பெட்டி திறந்து கிடந்தது. அதில் ஒரு நகை கூட இருக்கவில்லை. அதைக் கண்டு கோமதி ஆவென அலறி னாள்.

அப்போது கிருஷ்ணன் "பெட்டி பூட்டப்பட்டிருக்க, நகைகள் எப் படிக் காணாமல் போயின?'' என்று ஆச்சரியத்துடன் கேட் டான். கோமதியும் "இது நானாக வரவழைத்துக் கொண்ட தலை வலி. இது அந்நப் பட்டணத் துக்காரன் வேலை'' என்று கத்திக் கொண்டே மோகன் இருந்த அறைக் குச் சென்றாள்.

அவள் கோபத்தோடு "இது உனக்கே சரியா? மாமியாரின் நகைகளைத் திருடலாமா? மரியாதை



யாக என் நகைகளைக் கொடுத்து விடு. இல்லாவிட்டால் நடப்பதே வேறு. தெரிந்ததா?" என்று மிரட்டினாள்.

மோகன் எதுவும் தெரியாதவன்போல "மாப்பிள்ளையை பண்டிகைக்கு அழைத்துவிட்டுத் திருட்டுப்பட்டம் கட்டுகிறீர்களா? இதுவா உங்கள் வீட்டு மரியாதை! இனி ஒரு நிமிஷம்கூட இந்த வீட்டில் இருக்கமாட்டேன்" என்று கிளம்பினான்.

கோமதியோ "எங்கே போகிறாய்? முதலில் என் நகைகளை வைத்துவிட்டுப் போ. உன்னைப் பெட்டியைத் திறந்து ஆயிரம் ரூபாய் தானே எடுத்துக் கொள்ளச் சொன்னேன். நீ நகைகளை எடுத்து அமுக்கிவிட்டாயே" என்று கத்தினாள். மோகனோ "இது என்ன கதை? என்னை ஆயிரம் ரூபாய் எடுத்துக் கொள்ளச் சொன்னீர்களா? எதற்கு?" என்று கேட்டான். அப்போது கிருஷ்ணன் அங்கு வந்து "கோமதி! கொஞ்சம் மரியாதையாகப்பேசு. மாப்பிள்ளை பெட்டியை திறந்து ஏன் ஆயிரம் ரூபாய் திருடனைப்போல எடுக்க வேண்டும்?" என்று கேட்டான்.

கோமதியும் "என்னை மன்னித்து விடுங்கள்" என்று கூறித்தான் வகுத்த திட்டம் செயல்பட்ட விதத்தைக் கூறினாள். கிருஷ்ணனும் நிதானமாக "இந்த வயதில் உனக்கு அத்தர் எதற்கு? அன்று நீ மாப்பிள்ளையிடம் வாங்கிவரச் சொன்னதை நான் கேட்டே மாப்பிள்ளையுடன் சேர்ந்து ஒரு நாடகம் ஆடினேன். உன் நகைகள் எங்கும் போய்விடவில்லை. இதோ! என்னிடம் பத்திரமாக இருக்கிறது. நீ ஊதாரியானதும் அல்லாமல் உன் மகளையும் அப்படி இருக்க உபதேசித்தாய். அவளைத் திருத்த உன் மாப்பிள்ளைதான் இந்த யோசனையை என்னிடம் கூறினார்" என்றான்.

கோமதி வெட்கத்தால் தலை குனிந்து கொண்டாள்.



# இயற்கை விநோதங்கள்



## மீனகளைப் பிடிக்கப் பை.

பெலிகன் பறவைகளின் வாய் பெரியது. இவற்றின் மூக்கின் கீழ் ஒரு பை உள்ளது. அது மீன்களைப் பிடிக்க அதற்கு உதவுகிறது. பெலிகன் பறவைகள் கும்பலாக நீரில் நீந்தி சிறு மீன்களை கரையோரம் துரத்திச் செல்கின்றன. அப்போது அவை சட்டென் தம் அலகுகளை தண்ணீரில் முக்கி அதன் கீழ் உள்ள பைகளில் மீன்களைப் புகச் செய்கின்றன. வட அமெரிக்காவிலுள்ள பழுப்பு நிறப்பெலிகன் மட்டும் நீர் மட்டத்தின் மீது பறந்து இரண்டு மீட்டர் ஆழத்தில் உள்ள மீன்களைப் பிடித்துவிடுகிறது.

## சிறு மீன்கள் பெரிய திமிங்கலத்தின் உணவு

திமிங்கலங்களில் நீலத் திமிங்கலம் மிகப் பெரியதே. இந்தப் பெரிய திமிங்கலம் மிகச் சிறிய மீன் குஞ்சுகளைப் பிடித்துத் தின்று தான் உயிர் வாழ்கிறது. கூட்டம் கூட்டமாகச் செல்லும் 'க்ரீல்' என்ற சிறிய மீன்களை இத்திமிங்கலம் தன் வாயைத் திறந்து நீரோடு உள்ளே புகச் செய்து மீன்களை மட்டும் வாயில் வைத்துக் கொண்டு நீரைத் தன் தலையின் இரு பக்கமுள்ள துவாரங்களால் வெளியேற்றுகிறது. வாயிலுள்ள மீன்களை அது தின்றுவிடுகிறது.



## கிப்பனின் கத்தல்

குரங்குகள் நான்கு வகை. உராங் உடான், சிம்பான்ஜி, கொரில்லா, கிப்பன் எனப்படுபவை அவை. இந்த ரகக் குரங்குகள் கால்களால் நடக்கக் கூடியவை. ஆனால் கிப்பன் குரங்கு மட்டும் மனிதன்போல நிமிர்ந்து நடக்க வல்லது. மற்றவை குனிந்து இரு கால்களாலும் கைகளாலும் நடக்கும். சிய மங் கிப்பன் என்னும் ஒரு வகைக் குரங்கு மிகப் பலமாகக் கத்தும். தொண்டையி லுள்ள பை போன்ற பகுதி இப்படிக் கத்த உதவுகிறது. இதில் காற்றை நிரப்பி பலமாக ஊதி இது உரக்கக் கத்துகிறது.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!














It's time to go back to school again. Time for text books. Time for games. Time to meet old friends. And make new ones. Time to start studying again. Because there's so much to learn about the world around you.

From all of us here at Chandamama, have a great year in school. And remember to tell us what you've learnt everyday, when you come home from school !




CHANDAMAMA
COLLECTION

ARTIG1246

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 டிசம்பர் மாத இதழில் வெளியிடப்படும்



M. Natarajan



M. Natarajan

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * அக்டோபர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## ஆகஸ்டு மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **அதிசயத்திற்குச் சிறுமிகளின் கைகளில் ஒன்று**

இரண்டாவது போட்டோ: **ஆனந்தத்திற்கு சிறுவனின் கரங்களில் ஒன்று**

பரிசு பெற்றவர்: **சி. ஏ. சேதுராமன், கோவை - 6.**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**




# YOU'LL DROP



## Everything for BAKEMAN'S

# MILK DROPS






R K SWAMY/BBDO B/PL 7284 C

AMBULIMAMA (Tamil) October 1993 Regd. No. M. 4863